

"கவர்ன்மெண்டை எதிர்ப்பேன்!"

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 28.12.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஒளிவு மறைவு ஒன்றும் இல்லை!

– திருச்சி சிவா



ரஜினியிடம் ஆதரவு கேட்பது சரியா?

– இல.கணேசன்

# பாரம்பரியத்தின் கலையம்சம்!
# எளிதாய் கவர்ந்திடும் பொக்கிஷம்!

எண்ணற்ற டிசைன்களில்
குயின் ஆன்டிக் நகைகள்

20 கிராமிலிருந்து
2 கிலோ வரை

தமிழகத்தின் முதல்
BIS 916 ஹால்மார்க்
தரச்சான்று
பெற்ற நிறுவனம்!



ஸ்ரீ குமரன் ™
தங்கமாளிகை

இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை
(தி சென்னை சில்க்ஸ் அருகில்)

சென்னை • கோவை • திருப்பூர் • ஈரோடு • திருச்சி

Shop online at www.sktm.in | பரந்து விரிந்த கார் பார்க்கிங்



லெகிங்ஸ்! முன்பெல்லாம் குளிர்ப்பிரதேசங்களில் 'இன்னர் வியர்' என்ற பெயரில் போட்ட டைட் பாண்ட்ஸ், இன்று லேடீஸ் வார்ட்ரோபில் தடாலடியாக இடம்பிடித்திருக்கிறது. இந்த டைட் இம்சையைக் கண்டால் பெண்களுக்குக் குஷி!

காட்டன் லைக்ரா லெகிங்ஸ் போடாத, விருப்பப் படாத பெண்களே கிடையாது என அடித்துச் சொல்ல லாம், அந்தளவு டிமாண்ட்! ஜிம், யோகா, உடற்பயிற்சி உடையாக இருந்த லெகிங்ஸ், மாஜிக்காக ஜம்ப் அடித்து பெண்களை எங்கும் என்றும் போடவைத்து விட்டது!

அக்னி நட்சத்திரம் சினிமாவில் அமலா ஜிம்மில் ஒரு ஆட்டம் போடுவாரே... அதில் போட்ட உடை லெகிங்ஸ்தான். ஷில்பா ஷெட்டி அறிமுகமான பாஸிகர்

# பழசுக்குத் திரும்பும்

'கிதாபேன் பஹுத்' என்ற பாட்டில் லெகிங்ஸைப் போட்டு ரகளையாக டான்ஸ் ஆடினார்.

தினம் தினம் புதிது புதிதாக ஃபேஷன் மார்க் கெட்டில் கலர் கலர் ட்ரஸ், குர்தீஸ், டாப்ஸ்... என அறிமுகமாகி இளம்பெண் களை உற்சாகப்படுத்துகிறது. திடீரென 80களில் பாப்புல ராக இருந்த ஒரு டிரஸ் திரும்பவும் ஸ்டைல் ஸ்டேட்மென்ட் ஆகி பட் டாம்பூச்சி பெண்களின் ஃபேஷன் மந்த்ராவாகி விட் டது.

படு டைட்டான இந்த ட்ரஸ்ஸின் திருநாமம்

★ **லெகிங்ஸ் யார் போடலாம்?** பிறந்த குழந்தையிலிருந்து பாண்ட் போடத் தயங்காத வயது வரை தாராளமாக இந்த உடையை அணியலாம். காட்டன் லைக்ரா எனக் கேட்டு வாங்கவும். பாலியெஸ்டர் லெகிங்ஸ் என்றால் அது வொர்க் அவுட், ஜிம்முக்கு மட்டுமே போட முடியும்.

★ **என்ன கலர்ஸ்?** ப்ளாக், ப்ரௌன், டார்க் க்ரேதான் செம ஹிட்! பல கலர்களில் வருகிறது இந்த உடை. கொஞ்சம் எக்ஸ்பெரி'மெண்டல்' எனப் பெயரெடுக்க விரும்பினால் பிங்க், லைம், எலக்ட்ரிக் ப்ளூ... எனப் போட்டுப் பின்னலாம்.

★ **என்ன டிஸைன்?** பொதுவாக ப்ளெய்ன்தான் அதிகமாகப் போடப்படுகிறது. இருந்தாலும் அனிமல் ப்ரிண்ட்ஸ், ஃப்ளோரல், ஸ்ட்ரைப்... என நீங்கள் போட்டால் 'சூப்பர்டா' 'கலக்கிட்டா' 'ஹய்யோ இப்படி பின்றாளே...' போன்ற கமெண்ட்கள் காஃபிடே மற்றும் ஸ்பென்சரில் கேட்கும்.

★ **எதனுடன் போட வேண்டும்?** லெகிங்ஸ்

போட்டால் குர்திஸ், டாப்ஸ், டீ-ஷர்ட் எது வேண்டுமானாலும் போடலாம். மிக நீளமான, தொங்கலான டீ-ஷர்ட்ஸ் போடக்கூடாது. அது அவுட் ஆஃப் ஃபேஷன். ட்யூனிக் டாப்ஸ், எம்பயர் வைஸ்ட் (டெய்லரிடம் கேட்கவும்) டாப்ஸ்தான் சரியான மாட்ச்!

★ **எப்படி இருக்க வேண்டும்?** லெகிங்ஸ் போட்டால் ஸ்லிம்மாக இருந்தால் கூடுதல் அழகு. கால்கள் மிகப் பருமனாக இருந்தால் லெகிங்ஸ் போடுவதைத் தவிர்த்தல் நலம். இந்த உடையின் நீளம் கணுக்கால் அளவு இருக்கலாம். அல்லது முழங்காலுக்குக் கீழே கேப்ரீஸ் ஸ்டைலிலும் போடலாம்.

# ஃபேஷன்



**ஃபேஷன் நியூஸ் :** சமீபத்தில் ஹாலிவுட் திரைப்பட நடிகை லிண்ட்ஸே லோஹன் அறிமுகப்படுத்தியிருக்கும் 6126 லெகிங்ஸ், அமெரிக்காவின் செம ஹாட் ட்ரஸ்ஸாகி, விற்பனையில் சாதனை படைத்து வருகிறதாம். சுமார் 35 ஸ்டைலில் வந்திருக்கும் இந்த லெகிங்ஸின் விலை சுமார் 44 லிருந்து 132 டாலர் வரை... அப்படியும் பெண்கள் மனம் தளராமல் கடைகளை மொய்க்கிறார்களாம். இத்தனைக்கும் இந்த உடையை ட்ரைக்லீன்தான் பண்ண முடியுமாம்.

**- லதா சேகர்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**
உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**
தொலைநகல் : **044 - 4343 8899**
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



பா.ஜ.க. என்ன யுக்தி வைத்திருக்கிறது? தமிழகத் தலைவர் இல.கணேசனோடு ஒரு சந்திப்பு:

**தேசிய அளவில் மாற்று சக்தியாக இருக்கும் பா.ஜ.க. தமிழகத்தில் இன்னும் காலூன்றவே இல்லையே?**

''பல பாராளுமன்றத் தொகுதிகளில் நாங்கள் நூறு சதவிகிதம் யூத் கமிட்டி அமைத்திருக்கிறோம். கட்சி வளர்ந்து கொண்டு இருக்கிறது. பத்தாண்டுகளுக்கு முன்னர் 13 மாவட்டங்களில்தான் அமைப்புகள் இருந்தன. இப்போது எல்லா மாவட்டங்களிலும் அமைப்புகள் உள்ளன. பஞ்சாயத்து அளவில் 8500 கிளைகள் உள்ளன. பாராளுமன்றம், சட்டமன்றம் என்று எல்லா தொகுதிகளிலும் எங்களால் வேட்பாளரை நிறுத்த முடியும்.''

**காங்கிரஸைப் போலவே கோஷ்டிப் பூசலும் இருக்கிறதே?**

''மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை முறையாகத் தேர்தல் நடத்தும் ஒரே கட்சி பா.ஜ.க.தான். தி.மு.க.வைப் போல், அரிவாள், வேல்கம்பு மோதல்களுடன் தேர்தல் நடக்காது. காங்கிரஸைப் போல கதர் சட்டைகள் கிழியாது. நாங்கள் கட்டுப்பாடானவர்கள். அங்கொன்றும், இங்கொன்றுமாகப் பூசல்கள் இருக்கலாம். மீடியா சிலசமயம் அவற்றைப் பெரிது படுத்துகிறது.''

**தேசிய அளவில் பலம் பொருந்திய நீங்கள் மாநில அளவில் விஜயகாந்த் இணைவாரா? ஜெ. கூட்டணி அமைப்பாரா என்று**

**பாராளுமன்றத் தேர்தலை நம்பிக்கையோடு எதிர்நோக்கியிருந்த பா.ஜ.க., ஐந்து மாநிலத் தேர்தல் முடிவுகள் கொடுத்த அதிர்ச்சியால் சற்று துவண்டு போயிருக்கிறது. தமிழகத்திலோ, அ.இ.அ.தி.மு.க., காம்ரேடுகளுடன் கை கோத்துவிட்டதில் அப்செட்!**

**எதிர்பார்ப்பது ஏன்?**

''தமிழகத்தைப் பொறுத்தவரை நாங்கள் தனித்துப் போட்டியிட்டு சில தொகுதிகளில் வெற்றி பெற முடியும். ஆனால், அது போதாது. கூட்டணி அமைப்பதன் மூலம் தமிழகத்திலிருந்து அதிக அளவில் எம்.பி.க்களை அழைத்துச் சென்றால், பா.ஜ.க ஆட்சி அமைக்க உதவியாக இருக்கும் என்ற அடிப்படையில் கூட்டணியை விரும்புகிறோம். கடந்த கால வரலாற்றைப் பார்க்கும்போது பல பிரச்னைகளில் அ.இ.அ.தி.மு.க.வின் நிலைப்பாடும் எங்கள் நிலைப்பாடும் ஒன்றாக இருந்தன. இதன் காரணமாக பா.ஜ.க - அ.தி.மு.க. உடன்பாடு ஏற்படும் என்பதுதான் இயல்பான மக்கள் எதிர்பார்ப்பாக இருந்தது. இன்னமும் பல பிரச்னைகளில் விஜயகாந்தின் கருத்து முழுமையாகத் தெரியாவிட்டாலும் அவருக்கு எங்களுடன் முரண்பாடுகள் இருப்பதாகத் தெரியவில்லை. பாராளுமன்றத் தேர்தல் இன்னமும் அறிவிக்கப்படவில்லை. அத்வானி நாட்டுக்குத் தலைமையேற்க வேண்டும் என்று விரும்பும் சில கட்சிகள், எங்களுடன் கைகோக்கும் வாய்ப்பையும் மறுப்பதற்கில்லை. நாங்கள் நம்பிக்கையோடு இருக்கிறோம்.''



# ரஜினியிடம் ஆதரவு கேட்பது சரியா?

## -இல. கணேசன் பேட்டி

**அத்வானி போன்ற பெரிய தலைவர்கள் ரஜினியிடம் ஆதரவு கேட்டது நன்றாக இருக்கிறதா?**

''ரஜினி ஒரு தேசியவாதி; ஆன்மிகவாதி. அவருக்கு அத்வானியை 18 வருடங்களாகத் தெரியும். அவர் மீது ரஜினிக்கு மிகுந்த மரியாதை உண்டு. வாய்ப்பு கிடைக்கும்போது இருவரும் சந்திக்கிறார்கள். ரஜினியை பா.ஜ.க.வுக்கு ஆதரவாகச்

செயல்பட அத்வானி அழைத்தார் என்பது தவறு. அதுபோன்ற கருத்தைச் சொன்னவர் சோ. மற்றபடி அத்வானி - ரஜினி சமீபத்திய சந்திப்பில் அரசியல் இடம் பெறவில்லை.''

**தேர்தல் நேரத்தில் ரஜினிக்கு ஒரு மவுசு வர மற்ற நேரத்தில் யாரும் அவரைக் கண்டு கொள்வதில்லையே?**

''கடந்த காலத்தில் அவரது 'வாய்ஸ்' தேர்தல் முடிவுகளில் மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கிறது. எனவே தேர்தல் நேரத்தில் அவரது நிலைப்பாடு அனைவராலும் ஆவலோடு எதிர்பார்க்கப்படுகிறது.''

## இன்னமும் பல பிரச்னைகளில் விஜயகாந்தின் கருத்து முழுமையாகத் தெரியவில்லை

**வரும் பாராளுமன்றத் தேர்தலில் பயங்கரவாதப் பிரச்னையை பா.ஜ.க. அரசியலாக மாற்றிப் பிரசாரம் செய்யுமா?**

''பயங்கரவாதம் ஒரு தேசியப் பிரச்னை. ஆனால், இந்தப் பிரச்னையை எதிர்கொள்வதில் தேசம் இரண்டு பிரிவாக இருக்கிறது. ஒரு பிரிவு அப்பழுக்கற்ற தேசிய, தேச நலனுடன் செயல்படும் பா.ஜ.க. தலைமையிலான பிரிவு. மற்றொரு பிரிவு மதச்சார்பின்மை என்ற போலி வாதங்கள் பேசி, சிறுபான்மையோர் வோட்டுக்களைக் கவர, பயங்கரவாத மேட்டர்களில் மென்மையாகச் செயல்படும் காங்கிரஸ் தலைமையிலான பிரிவு. மக்கள் யாரை நம்பி வோட்டுப் போடுவார்கள் என்று தேர்தலில் தெரிந்துவிடும்.''

**பாராளுமன்ற அட்டாக் பா.ஜ.க. ஆட்சியில் நடந்ததே!**

'''பொடா' சட்டம் இருந்ததால், கைது செய்ய வேண்டியவர்களை உடனடியாகக் கைது செய்து, ஆறே மாதத்தில் குற்றவாளிகளுக்குத் தண்டனை வாங்கிக் கொடுத்தோம். ஆனால், இங்கே, தமிழ்நாட்டில் 93ல் நடந்த ஆர்.எஸ்.எஸ் அலுவலக குண்டு வெடிப்பு இன்னும் விசாரிக்கப்பட்டு வருகிறது!''

**ஸ்பெக்ட்ரம் - அவ்வளவுதானா?**

''பிளவுபட்ட குடும்பம் ஒன்று சேர்ந்ததில் மகிழ்ச்சி. பிரிந்திருந்தபோது வீசப்பட்ட குற்றச்சாட்டுகள் என்றும் மறையாது.''

**திருமங்கலம்?**

''கடந்தமுறை 8000 வோட்டுகளைப் பெற்றோம். இப்போது போட்டியிட்டு எங்கள் கவனத்தை அங்கு திருப்ப விரும்பவில்லை. முழுக்க, முழுக்க பாராளுமன்றத் தேர்தலில் கவனம் செலுத்த விரும்புகிறோம். மேலும் தொகுதி மறுசீரமைக்கப்பட்ட நிலையில் அங்கு தேர்தல் தேவையில்லை என்பதே எங்கள் கருத்து.''

**- ப்ரியன்**

# லிப்கோ ஸ்தாபகர் சர்மாஜி நூற்றாண்டு நினைவுப் பதிப்புகள்!




கல்வியாளர்கள் பரிந்துரைக்கும்
லிப்கோ டிக்ஷனரிகளின் வரிசையில் ஒப்பற்ற புதிய வரவு!

## லிப்கோ தமிழ்-தமிழ்-ஆங்கிலப்

# பேரகராதி

LIFCO TAMIL-TAMIL-ENGLISH GREAT DICTIONARY

- பற்பல ஆண்டுகளின் அனுபவத்தால் தொகுக்கப்பெற்ற நடைமுறை சொற்களஞ்சியம்!
- தமிழைப் பிழையறக் கற்கப் பெரிதும் பயன்படும் நூல்!
- லிப்கோ அகராதிகளுக்கே உரித்தான பொது அறிவு பொலியும் பிற்சேர்க்கையுடன் பெரிய அளவில் 1056 பக்கங்கள்

அறிமுக விலை ரூ. **200**; தபாலில் பெற ரூ. **230** M.O. / D.D. அனுப்புக



டிசம்பர் 27 -
<u>அனுமத் ஜயந்தி</u>

லிப்கோவின்
**ஸ்ரீ அனுமானின் அற்புத ப்ரபாவங்கள்**
144 பக்கங்கள்
வண்ணப்படங்களுடன்
விலை ரூ. 30
தபாலில் ரூ. 50




தொகை அனுப்பவேண்டிய முகவரி: **லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி.) லிட்.**
36, வடக்கு ரோடு, மேற்கு C.I.T நகர், சென்னை - 600 035. போன்: 2434 1538, 2433 6467
**ஷோ ரூம்:** லிப்கோ அஸோஸியேட்ஸ், 'நாராயணா அபார்ட்மெண்ட்ஸ்', 23/G-5, ராமேஸ்வரம் ரோடு
(மாம்பலம் ரெயில் நிலையம் அருகில்), தி.நகர், சென்னை - 600 017. போன்: 2432 3298
E-mail: info@lifcobooks.com | www.lifcobooks.com

**80 ஆண்டுகளாகப் புத்தக உலகில் பெரும்புகழ்!**




## ஆயிரத்தில் ஒருவன்

# சரிவைச் சமாளிப்போமா?



## ‘மா ஃபா’ பாண்டியராஜன்

‘அடுக்குமாடிக் குடியிருப்பில் வீட்டை வாங்குபவர்கள், முழுத்திருப்தியுடன் வாங்குகிறார்கள் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. பில்டர், இடத்தைக் கொடுக்கும் முன் உள்ளே சென்று பார்க்கும் மனைவி, ‘‘என்னங்க நான் பாத்ரூம்ல போடச் சொன்ன டைல் கலரே வேற... சொதப்பிட்டாங்களே’’ என்று கணவர் மீது பாய்வது சகஜமாக நடக்கும்! அது மட்டுமா? முன் பணம் கொடுக்கும் முன்பு ஆயிரத்தெட்டு வாக்குறுதிகளை அள்ளி வீசும் பில்டர், வீட்டை ஒப்படைக்கும் போது அதில் ஐம்பது சதவிகிதத்தைக் கூட நிறைவேற்றாமல் இருப்பதும் வாடிக்கை. நமக்குப் பிடித்த கலர் பெயிண்ட் உபயோகிக்காததிலிருந்து காலிங்பெல் செலக்‌ஷன் வரை, பலவித அதிருப்திகளுடன்தான் அடுக்குமாடி வீட்டில் குடிபோகிறோம். போதாததற்கு, சி.எம்.டி.ஏ. கொடுத்த அங்கீகாரத்தை மீறிக் கட்டப்படும் கட்டுமானங்கள், சரியான பதிவுகள் இல்லாத வில்லங்கமான நிலங்கள் என்ற நீண்ட காலத் தலைவலிகளும் உண்டு. கட்டடத் தொழிலில் மக்களைத் திருப்திப்படுத்தி, பல்லாண்டுகள் நிலைத்து நிற்பது என்பது ஒரு சிலருக்கு மட்டுமே சாத்தியமாகிறது. அப்படிப்பட்டவர்களில் ஒருவர்தான் அக்ஷயா பில்டர்ஸ் சிட்டிபாபு. ஒரு சிவில் என்ஜினியராக வாழ்க்கையைத் துவக்கிய நாகர்கோவில் சிட்டிபாபு, 1995ல் சிறிய அளவில் கட்டுமான நிறுவனத்தைத் துவக்கினார். பத்தே ஆண்டுகளில்,



வெற்றி பளிச்செனத் தெரியும். ''நாங்கள் அட்வான்ஸ் வாங்கும்போது கொடுக்கும் வாக்குறுதிகளைக் கண்டிப்பாக நிறைவேற்றுகிறோம். நிலம் வாங்கி வீடுகள் கட்டும் இடத்தில் நில உரிமை தொடர்பாக எந்தப் பிரச்னையும் வராத அளவுக்கு நிலம் தொடர்பான ஆவணங்களில் கவனம் செலுத்துகிறோம். தவிர, எதிர்காலத்தில், நில உரிமை உட்பட எல்லாப் பிரச்னைகளையும் ஏற்றுக்கொள்கிறோம். சி.எம்.டி.ஏ. விதிகளையும் சிறிய அளவில்கூட மீறமாட்டோம்'' என்று தம் நிறுவனத்தின் வெற்றி ரகசியத்தைச் சொல்கிறார் சிட்டிபாபு. தரத்துக்காக ஐ.எஸ்.ஓ. தரச்சான்றிதழ் வாங்கியிருக்கிறது நிறுவனம். சிறந்த பில்டர் எனப் பல விருதுகளை வாங்கிக் குவித்திருக்கிறார் சிட்டிபாபு. இவரது கட்டுமானங்களில் அன்றாடம் 10,000 பேர் வேலை செய்கிறார்கள். பொறியாளர்கள் மட்டும் நூறுக்கும் மேல்!



✱ சிட்டிபாபு

நிறுவனம் விறு விறு வளர்ச்சியடைந்தது. சென்னை ஐ.டி. நெடுஞ்சாலையில் (ஓ.எம்.ஆர்) முதன் முதலாக வணிக வளாகங்களையும், அடுக்குமாடிக் குடியிருப்புகளையும் கட்டியவர் சிட்டிபாபுதான். 2006-07ல் நூறு கோடி ரூபாய்க்கு வர்த்தகம் செய்த சிட்டிபாபு, இந்த நிதியாண்டில் 350 கோடி ரூபாய்க்கு வர்த்தகம் செய்யவிருக்கிறார் என்றால், சிட்டிபாபுவின்

கட்டுமானம், ரியல் எஸ்டேட் - இரண்டும் இரட்டைக் குழந்தைகள் என்று சொல்லலாம். இன்று நமது நாட்டில், விவசாயத்துக்கு அடுத்தபடியாக வேலை வாய்ப்பைத் தருவது கட்டுமானத் தொழில்தான். நமது நாட்டு வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதில் முக்கியப் பங்களிப்பு ஆற்றிய கட்டுமானமும், ரியல் எஸ்டேட்டும், சென்ற சில ஆண்டுகளில், அந்நிய முதலீடுகளைப் பெரு மளவில் கொண்டு சேர்த்தன. ஆனால், இந்த வருடம் போதாத காலம். உலகப் பொருளாதாரப் பின்னடைவு, தனது அழுத்தமான முத்திரைகளை நமது கட்டுமானத் தொழில் மீது பதித்திருக்கிறது. இந்த நிதியாண்டில் நிலம் விற்பனை, வாங்குவது

# பாண்டி'S BLOG



"உழைக்கும் தோழர்களே ஒன்று கூடுங்கள்; உலகம் நமது என்று சிந்து பாடுங்கள்" - இதைத்தான் இப்போது சீனா செய்து கொண்டிருக்கிறது. கனரக சாதனங்கள், மருத்துவக் கருவிகள், வாகனங்கள், நுகர்வோருக்கான சகலவிதமான பொருட்கள் என்று ஏற்றுமதி செய்து, உலக சந்தைப் பொருளாதாரத்தில் கொடிநாட்டிக் கொண்டிருக்கிறது சீனா. உலகில் பல நாடுகள் பொருளாதார சுணக்கம் காரணமாகத் தள்ளாடுகின்றன. ஆனால் சீனாவில் தடுப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு விட்டன. ஏற்றுமதி மூலம் அது குவிக்கும் பணம், அதன் பொருளாதாரத்தை வலுவாக வைத்திருக்கிறது. உலகின் அதிக மக்கள் தொகை கொண்ட நாட்டை சுபிட்சமாக வைத்துக் கொள்வது என்பது சாதாரண காரியமல்ல.

இப்போது சீனா வளமாக இருக்கிறது என்றால், அதற்கான அடித்தளம் 1980களில் போடப்பட்டது. கம்யூனிஸ சித்தாந்தங்களில் தடம்பதித்த சீனா, வெளிநாட்டு முதலீட்டுக்குக் கதவைத் திறந்தபோது, 'ஐயோ... முதலாளித்துவம் முன்னணிக்கு வந்து விடுமே' என்று கவலைப்பட்டனர் காம்ரேடுகள். ஆனால், எதிர்ப்புகளைக் கண்டு கவலைப்படாமல் செயல்பட்டது சீன அரசு. அதற்கான பலனை இப்போது அறுவடை செய்து கொண்டிருக்கிறது. இந்தியாவில், அரசியல் சகதியில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கும் சிறப்புப் பொருளாதார மண்டலங்கள் என்ற கருத்தோட்டம், முதலில் தோன்றியது சீனாவில் தான். அங்கு நிலத்தைக் கையகப்படுத்திய போது எந்தப் பிரச்னையும் எழவில்லை. காரணம் அங்கு நிலங்கள் அனைத்தும் அரசின் உடைமை. இடத்தைக் கொடுத்து, வரிச்சலுகைகள் தந்து, தொழிலாளர் சட்டங்களைச் சுலபமாக்கி, மின் கட்டணச் சலுகைகளைத் தந்து பொருளாதார மண்டலங்களில் உற்பத்தியைப் பெருக்கியது சீனா. இன்று சீனப் பொருட்கள் கிடைக்காத நாடுகளே இல்லை. நீர்வளம் மிகுந்த சீனா, விவசாயத்தையும் புறந்தள்ளாமல் முன்னுரிமை கொடுத்தது.

போன்றவை முப்பத்தைந்து சதவிகித வீழ்ச்சியைச் சந்தித்திருக்கின்றன. டி.எல்.எஃப் போன்ற பெரிய நிறுவனங்கள் கூட கொஞ்சம் ஆடித்தான் போயிருக்கின்றன. ஆனால், இந்த நிலையை நீடிக்க விடக் கூடாதென்று அரசாங்கம் களத்தில் குதித்திருக்கிறது. வீட்டுக் கடனுக்கான வட்டி விகிதம் குறைக்கப்பட்டிருக்கிறது. மேலும், அதிக அளவில் கடன் பெறும் கட்டுமான நிறுவனங்களுக்கு, பல நிதிச் சலுகைகள் வழங்கப்பட இருக்கின்றன. அரசின் இந்த நடவடிக்கைகள் சரிந்து கிடக்கும் கட்டுமானத் தொழிலைத் தூக்கி நிறுத்தவேண்டும்.

*(வெளிச்சம் வீசும்)*

எழுத்தாக்கம் : ஸ்ரீநி

# வெள்ள நிவாரணம்- வோட்டுக்கு அச்சாரம்!



ஜெயலலிதா செய்த தவறுகளைத் தாங்கள் செய்ய மாட்டோம் என்று அடிக்கடி சொல்கிறார் முதல்வர் கருணாநிதி. ஆனால், வெள்ள நிவாரணமாக குடும்பத்துக்கு ரூபாய் 2000 கொடுப்பதில் மட்டும் அப்படியே அ.தி.மு.க.வைப் பின்பற்றுகிறது தி.மு.க. இதற்குக் காரணம் 2006 சட்டமன்றத் தேர்தலுக்கு முன்னர், சகட்டு மேனிக்கு வெள்ள நிவாரணமாக ரூபாய் 2000 கொடுத்து சென்னையில் ஜெ. ஏழு சட்டமன்றத் தொகுதிகளில் வென்றதுதான்! எனவே பாராளுமன்றத் தேர்தலைக் குறியாக வைத்து தி.மு.க.வும், பாதிக்கப்பட்டவர், பாதிக்கப்படாதவர்கள் என பிரித்துப் பார்க்காமல் எல்லோருக்கும் 2000 ரூபாய் கொடுத்து வருகிறது!

குடியிருப்புக்கு ஆதாரமாக ரேஷன் கார்டைப் பரிசோதித்து, அந்த வீட்டிலுள்ளோரின் மொத்த வருமானத்தைக் கணித்து, கிராம நிர்வாக அதிகாரி(VAO)யால் நிவாரணம் பரிந்துரைக்கப்பட வேண்டும். அதை வருவாய் ஆய்வாளர்(RI) சோதனை செய்து தாசில்தாருக்கு அறிக்கை கொடுக்க வேண்டும். அதன் பிறகு அவர் நிவாரணம் பற்றி முடிவு செய்ய வேண்டும். ஆனால், இந்த முறைப்படி எதுவும் நடப்பதில்லை. உள்ளூர் தி.மு.க.வினர் வீட்டுக்கு வீடு விசிட் செய்து ரேஷன் கார்டு நகலை வாங்கிக்கொள்கிறார்கள். பிறகு ஒன்றிரண்டு நாட்கள் கழித்து VAO முத்திரை போட்ட ஒரு சிறிய சீட்டை, வீட்டுக்கு வீடு கொடுத்து விட்டுப் போகிறார்கள். அந்த டோக்கனை எடுத்துக்கொண்டு தாசில்தார் அலுவலகத்துக்குப் போய் பணத்தை வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்!

* நிவாரண உதவி பெற நீண்ட வரிசை...

''உண்மையிலேயே பாதிக்கப்பட்ட ஏழைகளிடம் கட்சிக்காரர்கள் கமிஷன் வாங்குவதில்லை. ஆனால், அடுக்கு மாடிகளில் குடியிருக்கும் பாதிப்புக்கு உள்ளாகாத பெண்கள் பணத்துக்கு ஆசைப்பட்டு ரேஷன் கார்டு நகலைக் கட்சிக்காரரிடம் கொடுத்து, பணத்தை வாங்குகின்றனர். இதுபோன்றவர்களிடம் கட்சிக்காரர்கள் ரூ 500 வரை வசூல் செய்து விடுகிறார்கள்'' என்கிறார் வியாசர்பாடி ஜெகன்.

சென்னையில் மட்டும் 23 லட்சம் ரேஷன் கார்டுகள் இருக்கின்றன. அரசியல்வாதிகள் செய்யும் அக்கிரமம் ஒரு பக்கம் இருக்க, நேர்மையற்ற மக்களும் தான் இதுபோன்ற மோசடிகளுக்குக் காரணம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

- கௌசி

# கடைசித் தலைமுறை...!

தெய்வ ஆபரணங்கள் மற்றும் பரத நாட்டிய அணிகலன்கள் செய்யும் கலையில், குமரி மாவட்டம் வடசேரி ஆபரணக் கலைஞர்கள் புகழின் உச்சியில் இருந்தனர் ஒருகாலத்தில்.

சாமுத்திரிகா லட்சணத்தோடு சாஸ்திர விதிமுறைப்படி செய்யும் இந்த ஆபரணக் கலைஞர்கள், தங்களின் தொழில் காலத்தின் போது உடலை, உள்ளத்தைத் தூய்மையாகக் கட்டுப்பாட்டோடு வைத்திருந்தனர்.



* ஆபரணத் தொழிற்கூடம்



* ராமச்சந்திரன்

நகைகள் செய்யும்போது அப்பணி நிறைவடையும் காலம் வரை வீட்டுக்கே வர மாட்டார்கள். வேலை செய்யும் பட்டறைகளிலே தங்கி, காலை மாலை குளித்து, பூஜை செய்து, சைவ உணவு மட்டுமே உட்கொண்டு பணி முடிப்பர்.

ஊரே நகை செய்த காலம் போய், அந்த வம்சத்தில் இப்போது முந்நூறு பேர் மட்டுமே இத்தொழில் செய்கின்றனர். அவர்களுள் மூத்த கலைஞர் ராமச்சந்திரனைச் சந்தித்தபோது, ''தலை செட், மகர கண்டி மாலை, அட்டியல், ராக்கொடி, நத்து பில்லாக்கு, கைவங்கி, தோடு, பூத்தாலி, நெத்திச்சுட்டி, பிச்சிமாலை, ஒட்டியாணம், சலங்கை, தோடு, மாங்காய் மாலை, காது மாட்டல்... இவையெல்லாம் என்ன தெரியுமா?'' என்று மூச்சிறைக்கக் கேட்டு, அந்த ஆபரணங்களின் பெயர்களையும் அவை எந்தெந்த உறுப்புகளை அலங்கரிப்பவை என்பதையும் விவரிக்கிறார்.

''மிகுந்த வரவேற்பும் தேவையும் இத்தொழிலுக்கு இருந்தாலும், அடுத்த தலைமுறைக்குக் கடத்த முடியாதபடி இக்கலை அழிந்து, இந்தக் கடைசித் தலைமுறையோடு நின்றுவிடும்'' என்கிறார்.

இந்த அவசர யுகத்தில் பொறுமையின் எல்லையை நீட்டிக்கும் தொழிலைக் கற்கவோ, தொடரவோ இளையதலைமுறைக்கு ஆர்வமில்லை. அம்மனுக்கு ஒரு கிரீடம் செய்து

முடிக்க எட்டு மாதம் ஆகிறது. வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் இவர்கள், ஆபரணங்களுக்கான வடிவக் காப்புரிமையைப் பெற்றுள்ளனர். நடிகை பத்மினியின் அமெரிக்க நாட்டியப் பள்ளி மாணவர்களுக்கு பரதநாட்டிய ஆபரணங்கள் வாங்கிச் சென்றதை முக்கிய அனுபவமாகக் குறிப்பிடுகிறார்.

''நாட்டிய ஆபரணங்களை இரும்புப் பெட்டியில் வைக்கக்கூடாது. தண்ணீர் மற்றும் விபூதியில் துடைக்கக்கூடாது. வெள்ளைத் துணியில் துடைத்து, மரப்பெட்டியில்தான் வைக்க வேண்டும்'' என டிப்ஸ் தரும் இவர்கள், இந்தப் பாரம்பரியத் தொழிலின் கடைசித் தலைமுறை என்பது கலவரப்படுத்துகிறது. மெல்லக் கலை இனி சாகுமோ? அரசு இதைக் கவனிக்குமா?

செய்தி, சித்திரம்: த.இ.தாகூர்

மகர கண்டி மாலை
காது மாட்டல்
நெத்திச் சுட்டி
பிச்சி மாலை
ஒட்டியாணம்
கை வங்கி
கொலுசு
சலங்கை
அட்டியல்
ராக்கொடி
பூத்தாளி
தோடு
ஜிமிக்கி
மாங்காய் மாலை





**கல்கி**



2008 டிசம்பர் 28
ஸர்வதாரி மார்கழி 13
மலர் : 67
இதழ் : 22

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## அரசியல் சூதாட்ட அரங்கம்!

ஒரு நாடாளுமன்ற ஆய்வுக் குழு நிறுவப்பட்டால், அதன் பொறுப்பு என்ன? ஆய்வுக்குரிய விஷயத்தைத் தீர விசாரித்து, தெளிவான முடிவை அறிவிக்க வேண்டாமா? நம்பிக்கை வாக்கெடுப்பின்போது, லஞ்சப் பணத்துடன் தூதர்களை அனுப்பியதாகக் குற்றம் சாட்டப்பெற்ற அமர்சிங் (சமாஜ்வாதி), அஹ்மத் படேல் (காங்கிரஸ்) ஆகிய இருவரையும் லோக் சபா ஆய்வுக் குழு விசாரணைக்கு அழைக்கவேயில்லை! ராஜ்ய சபா எம்.பி.க்களை, லோக் சபா ஆய்வுக்குழு தருவித்து, கேள்விக்குட்படுத்த விதிகள் இடங்கொடுக்கவில்லையாம்! இப்படி விதிகளின் பேரில் பழியைப் போட்டுவிட்டு இந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயித்துவரும் நேர்மையற்ற அரசியல் போக்கு குறித்து என்னத்தைச் சொல்ல!

'எங்களுக்கு லஞ்சம் கொடுத்தார்கள்' என்பதாகக் குற்றம் சாட்டிய பி.ஜே.பி எம்.பி.க்களை தாராளமாக விசாரித்த லோக் சபா ஆய்வுக் குழு, 'லஞ்சப் பணத்தை எடுத்து வந்ததாகக் குற்றம் சாட்டப்பெற்ற நபர் மீதும் வேறு இருவர் மீதும் மேல் விசாரணைக்குச் சிபாரிசு செய்கிறோம்' என்று மட்டும் கூறி, ஒரேயடியாகக் கையை விரித்து, விவகாரத்தை மூடிவிட்டது!

இக்குழு சமர்ப்பித்துள்ள அறிக்கையை அங்கீகரிக்காமல் மாற்றுக்




கருத்து வெளியிட்ட மூன்று உறுப்பினர்களின் அறிக்கைக்குத்தான் மதிப்பு அதிகம். ஏனெனில், குற்றத்தை நிரூபிக்க முயற்சி செய்வதற்குப் பதிலாக, சாட்சியங்கள் இன்மையை நிரூபிக்கவே இந்தக் குழு முயன்றிருக்கிறது. முக்கிய குற்றவாளிகளாகக் கருதப்பட்ட அமர்சிங், அஹமத் படேல் ஆகியோரை விசாரிக்காததோடு, அவர்கள் குற்றமற்றவர்கள் என்றும் சொல்லிவிட்டது!

இந்த விவகாரத்தில், கட்சி மாறி வாக்களிக்க தங்களுக்கு லஞ்சம் தர காங்கிரஸ் கூட்டணியினர் முன் வந்ததாகவும், அதேபோல் பலருக்கும் பணம் விநியோகமானதாகவும் குற்றம் சாட்டியுள்ளனர் சில பா.ஜ.க. எம்.பிக்கள். இதன் அடிப்படையில் விசாரணை தொடங்கப்பட்டாலும், பணம் யாரிடமிருந்து வந்தது என்று விசாரணையில் தெரிய வரவேயில்லை. 'காங்கிரஸை சங்கடத்துக்குள்ளாக்குவதற்காக, பா.ஜ.க.தான் இந்த லஞ்ச நாடகத்தை அரங்கேற்றியது' என்கிற எண்ணத்தை உருவாக்கவே லோக் சபா குழு கூடுதல் முனைப்பு காட்டியிருக்கிறது!

இந்த ஆய்வுக் குழுவில், ஆளும் கூட்டணி உறுப்பினர்களே அதிகம் இடம் பெற்றிருந்ததால் அதன் ஆய்வு முடிவுகளை நடுநிலையானவையாக ஏற்பதற்கில்லை. இப்படிப்பட்ட அரை வேக்காட்டு அறிக்கையைத் தருவதற்கு ஓர் ஆய்வுக்குழுவை நிறுவுவதால் நேரமும் பொருளும் தான் விரயமாகின்றன. வழக்கை நேரடியாக சி.பி.ஐ.யிடம் ஒப்படைத்திருக்கலாம். அல்லது நீதிபதி தலைமையில் கமிஷன் விசாரணைக்கு உட்படுத்தியிருக்கலாம்.

நாடாளுமன்ற உறுப்பினர்கள், தங்களுக்கு இருக்கும் சிறப்புரிமைகளைக் கேடயமாக்கிக் கொண்டு குற்றங்கள் இழைப்பது கொடுமை. மக்களின் உரிமைக்குரல் ஒலிக்க வேண்டிய அரங்கமே நாடாளுமன்றம். ஆனால் மக்கள் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளோ, அதனை அரசியல் சூதாட்ட அரங்கமாக மாற்றி வருகின்றனர்! ○

# பொம்மலாட்டம்

கோடம்பாக்க 'செட்'டுக்குள்ளிருந்து அமெச்சூர் நாடகங்களைத் திரைவடிவங்களாகச் சிலாகித்துக் கொண்டிருந்த வேளையில், கேமராவைக் கழனிக்குக் கடத்தி வயல் வாழ்வை வாசிக்க வைத்தவர் பாரதிராஜா. சுழற்சி முறையில் மீண்டும் நகரத்தின் ஹை-டெக் வாசனையை, பொம்மலாட்டமாய் நிகழ்த்திக் காட்டியுள்ளார்.

(இந்த பில்டப் இருக்கட்டும்! இது மசாலாப் படமா? கலைப்படமா? இது வீட்டுச் சமையலா? ஃபாஸ்ட் ஃபுட் ஐட்டமா? செரிக்குமா? அஜீரணமாகுமா? அதைச் சொல்லு முதல்ல!) இது சினிமா இயக்குநரைப் பற்றிய கதை. இயக்குநர் தெருவில் ஆடும் பெண்ணை ஹீரோயினாகத் தேர்வு செய்து ஷூட்டிங் நடத்த, அந்தப் பெண்ணின் அழகில் மயங்கி நெருங்குபவர்கள் வரிசையாய்க் கொலையாகிறார்கள். கொலையாளி யார் என்பதைக் கண்டு பிடித்துச் சொல்வதே பொம்மலாட்டம்.

கிராமத்திலும் வெளிநாட்டிலும் ஷூட்டிங் மாறி மாறி நடந்தாலும் கொலைகள் தொடர்கின்றன. (அட... எல்லா இடத்திலும் ஆம்பிளைங்க ஒரே மாதிரிதானே?) ஒரு படத்திலேயே முதல்வர் கனவு காணும் நம்ம ஹீரோக்கள் - இயக்குநராக வரும் (ஆமாம்... நடிக்கிறார்னு தெரியாதபடி யதார்த்தமாய் இயக்குநராக வரும்) நானாபடேகரிடம், நடிப்பைத் தவணை முறையில் கடன் வாங்கலாம்; தப்பில்லை.

பழைய ஞாபகமாய் - கிராமம்; பளிச்சுன்னு தெரிய - ஃபாரின்; பார்த்துக்கிட்டே இருக்க - பாலே டான்ஸ்; பணியாரமாய் சிரிக்க - விவேக்; பன்முகத் தன்மைக்கு - படேகர்; பக்கத்து வீட்டுக்காரராய் - அர்ஜூன்; பலே வெற்றிக்கு - சஸ்பென்ஸ்; பதக்கம் வாங்கும் ஐடியாவுக்கு - டிஸ்மிஸ். ஐயா! நீர் இயக்குநர், நீரே இயக்குநர். தேர்தல் ஆட்டத்தில் ஜெயித்த இயக்குநருக்கு இது இரண்டாவது வெற்றி! (வியாபாரத்தில் மட்டுமே!)

- தனலட்சுமி



# செல்வம் பெருகட்டும்
# மகிழ்ச்சி நிலைக்கட்டும்






## உங்கள் செல்வத்தை
## பாதுகாப்பான முறையில்
## பெருக்கிடுங்கள்

## சென்னைக்கு மிக அருகில் CMDA/DTCP
## அங்கீகாரம் பெற்ற சிறந்த வீட்டு மனைப் பிரிவுகள்

### ஸ்ரீ ஹயக்ரீவா நகர்

**GST சாலையில்**

**மஹிந்திரா வேர்ல்டு சிட்டி அருகில்**

**(D.T.C.P. APPROVAL No. 117/2007)**

### ஸ்ரீ நரசிம்மா நகர்

**திருநின்றவூர்**

ஆவடி / பட்டாபிராம் / திருநின்றவூர் / பூந்தமல்லி
ஆகிய இடங்களிலிருந்து செல்லும் வசதி உண்டு.

**(CMDA Approval No. 37/2007)**

## BLB மனைகளில் முதலீடு செய்து வாழ்வில் வளம் சேருங்கள்

**சிறப்பம்சங்கள்:**

✓ தார் சாலைகள் ✓ முழுவதும் வேலியிடப்பட்டது ✓ உடனே வீடு கட்டலாம்
✓ சுற்றிலும் வீடுகள் ✓ சுவையான நிலத்தடி நீர் ✓ இரயில் மற்றும் பஸ் வசதியுடன் கூடியது
✓ தெளிவான பத்திரங்கள் ✓ 5 ஆண்டுகள் பாதுகாப்பு சேவை

கடன் வசதி




இலவசமாக மனையைப் பார்வையிட அழைக்கவும்:

## 28345104 / 05 / 06



## BLB ESTATES PRIVATE LIMITED

'SREE AUDISESHA BHAVAN', New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road),
**T.Nagar, Chennai - 600 017.** E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

## நன்மதிப்பில் முதலீடு

அப்பாவின் குரல் உரத்துக் கேட்கிறது என்றால், இரண்டே காரணங்கள்தான். ஒன்று அப்பா வீட்டில் இருக்கிறார்; இரண்டாவது அப்பா, அம்மாவிடம் பணம் கேட்கிறார்.

உமா புரண்டு படுத்தாள். எழுந்து போய்ப் பார்க்க மனசில்லை. அப்பாவின் இப்போதைய தோற்றம் ஏற்கெனவே பலமுறை பார்த்துச் சங்கடப்பட்டது.

''என்ன சொல்றே... உங்கையில ஒரு பைசாகூட இல்லியா..?''

அம்மாவின் முகம் நசுங்கிப் போய் பல மாதங்களாகி விட்டன. ஆறு கஜம் புடைவை, தன் வர்ணம் இழந்து அம்மாவின் மெலிந்த தேகத்தை அவஸ்தையாய் சுற்றிக்கொண்டிருந்தது.

''பதில் சொல்லுடி...''

''இல்லே...''

''ஒரே ஒரு ரூபா...?''

''இல்லே.''

''தெருவுல நிமிஷத்துல நூறு ரூபா பார்த்துருவேன். வீட்டுலேர்ந்து ஒரு பைசாவாவது எடுத்துக்கிட்டுப் போகணும்... அதான் கேட்கிறேன்.''

அம்மாவின் குரல் கேட்கவில்லை. இதே சால்ஜாப்பை அப்பா நிறைய தடவைகள் உபயோகித்து இருக்கிறார்.

''கொடுடி... எனக்கு நேரமாச்சு.''

முள் நகர நகர அப்பாவின் தீவிரம் வலுப்பெற்று ஏதேனும் காசு பார்க்காமல் விடமாட்டார் என்று புரிந்தது உமாவுக்கு.

இதன் அடுத்த கட்டமாய் அம்மாவின் மீது 'எல்லை தாண்டிய பயங்கரவாதம்' நிகழக்கூடும்.

அம்மாவாவது கொடுத்துத்



# கிங்... க்வீன்... ஜாக்!

தொலைக்கலாம். வெட்டி வீம்பினால் இந்த மனிதனைத் திருத்த முடியப் போவதில்லை.

''என்னடி... தருவியா... மாட்டியா?''

குரல் நிதானமானது. உமா சட்டென்று எழுந்து வந்துவிட்டாள்.

''அம்மா...''

# மினிதொடர்




## ரிஷபன்

கண்ணீர் துளிக்கூட புலப்படாத இறுக்கமான முகத்துடன் அம்மா திரும்பினாள். ஆறு கால பூஜை தவறிய அம்மன் போல சோகை அப்பிய முகம்.

"இதை அப்பாகிட்டே கொடும்மா."

அம்மாவின் பிடிவாதம் உயர நீட்டிய ரூபாய் நோட்டை வாங்க மறுத்தது.

"ப்ளீஸ்மா..."

அருகில் வந்து கையில் திணிக்க, பிடி அகன்று கீழே தவறிய தாளை அப்பா லாகவமாய் ஏந்திக்கொண்டார்.

முகம் பிரகாசித்தது.

"இனி ஜெயம்தான்டி. இதை முதல்லேயே செஞ்சிருக்கலாம்ல..."

செருப்பு சப்திக்க தெருவில் இறங்கிப் போனார். இனி எப்போது வீடு திரும்புவாரோ அவருக்கே வெளிச்சம். ஐம்பத்

திரண்டு கார்டுகள். ஏஸ், கிங், க்வீன்... ஜாக்... என உபரியாய் ஜோக்கர்களுடன், கடை வீதியின் ஒரு கட்டட முதல் மாடி அறைக்குள் வேறு ஒரு உலகத்தில் பிரவேசித்து நிற்பார்.

அப்பா... உமா மனசுக்குள் தேம்பினாள்.

மௌனமாய் நகர்ந்தது அன்றைய விடுமுறை தினம்.

நாளையிலிருந்து ஆறு நாட்களுக்கு அலுவலகம் சொர்க்க வாசல் திறந்து வைத்திருக்கும். இரவில் தூங்கும் நேரம்கூட அலுவலகம் சம்பந்தப்பட்ட கனாக்கள். அம்மாவும் அவளுங்கூட சம்பிரதாயப் பேச்சு மட்டும் பேசிக் கொண்டு.



உமாவால் முடியவில்லை. ஒவ்வொரு நாளும் அம்மா புதுப்புது சோகம் வைத்திருப்பாள். பேசப் போனால் பாரம் தலை மாறி ஏறிக்கொண்டு அழுத்தும்.

அப்பாவின் சீட்டாட்டப் பைத்தியம் ஒன்றும் புதிதில்லை. அம்மாவைப் பெண் பார்த்துத் திரும்பிப் போன தினத்திலேயே தெரியும். அதே ஊரில் அப்பா தங்கிவிட்டார்.

'கச்சேரிக்குப் பெயர் போன ஊர்.'

''நம்ம ஜானாவைப் பார்க்க வந்தானே... குப்புசாமி வீட்டுத் திண்ணையில... சீட்டு விளையாடிண்டிருக்கான்.''

இத்தனை வெறியாய் இருப்பார் என்று தோன்றவில்லையாம். பெண் பிடித்துப் போனதால், இன்னொரு தரம் பார்க்க வசதியாக பொய்க் காரணத்தோடு திண்ணையில் இடம் பிடித்ததாக நினைத்தார்களாம்.

மாப்பிள்ளை அழைப்பன்று இரவும் இடைவிடாத கச்சேரி. 'முகூர்த்தத்துக்கு நேரமாச்சு... வாடா' என்று கையைப் பிடித்து இழுக்காத குறை.

உமா பிறந்தாள்.

அன்று அப்பா அதிக சந்தோஷத்தில் இருந்தாராம். ஆயிரம் ரூபாய் வரவு. 'இவ பொறந்த வேளை...'

அம்மாவுக்கு அப்பா, அவரது சீட்டாட்ட மற்றும் பிற வெறிகள் பழகிப் போய்விட்டன.

பழைய பிளாக் அண்ட் வொயிட் புகைப்படத்தில் அம்மாவின் புஷ்டியான தோற்றம் இப்போதும் பிரமிப்பு தரும். அப்பாவைப் பின்னுக்குத் தள்ளி ராணி போல கம்பீரம் காட்டிய புகைப்படம்.

இப்போது எடுத்த புகைப்படம் ஏதோ 'திருஷ்டி' போலத் தெரிகிறது. அந்த அம்மாவா இப்படி ஆனாள்...?

''உன்னால தடுக்க முடியலியாம்மா?'' உமா ஆற்றமாட்டாமல் ஒரு தரம் கேட்டிருக்கிறாள்.

அம்மா சிரித்தாள். வெற்றுச் சிரிப்பு.

''இல்லம்மா... அப்ப நீ என்ன சொன்னாலும் அப்பா கேட்டிருப்பார். அந்த மாதிரி இருந்திருக்கே.''

அம்மாவின் புன்முறுவலில் இன்னமும்

## பத்து ஆட்டோக்களுடன் நகுலன்

“இதொன்றும் சினிமாவையே புரட்டிப் போடும் நெம்புகோல் கதையம்சம் கொண்ட படம் அல்ல. எப்போதும் போல் எல்லா கமர்ஷியல் ஐட்டங்களும் கொண்ட ஒரு கமர்ஷியல் ராக்கெட்தான் இந்தப் படம்'' என்கிறார் 'மாசிலாமணி' படத்தின் இயக்குநர் என்.ஆர். மனோகர். கே.எஸ். ரவிக்குமாரின் உதவியாளர்.

''திருத்தணியிலிருந்து சினிமா கனவுகளோட சென்னைக்கு வந்த எனக்கு, உதவி இயக்குநர் வாய்ப்பு ஈஸியா கிடைச்சிடுச்சு. ஆனால், இயக்குநர் வாய்ப்பு கிட்டத்தட்ட ஒரு கண்ணாமூச்சி விளையாட்டவே போயிடுமோன்னு பயந்த நேரத்துல இந்தப் பட வாய்ப்பு வந்தது. என்னோட புரொடியூஸர் கல்பாத்தி அகோர். என்னோட முகத்தைப் பார்த்தே எனக்கு என்ன தேவையோ அதை ரெடி பண்ணிக் கொடுத்திடறார். இந்தப் படத்துக்கும் அது போலத்தான். நகுலன் ஆட்டோ ஓட்டற ஒரு சீன்ல பத்து ஆட்டோக்கள் தேவைப்பட்டன. இந்த யோசனை ஸ்பாட்லதான் தோணிச்சு. உதவியாளர்கிட்ட பேசிக்கிட்டு இருந்ததைக் கேட்ட புரொடியூஸர் உடனே ஏற்பாடு பண்ணிக் கொடுத்து என்னை வியக்க வைச்சார். அவரோட நல்ல மனசுக்காகவே படம் நல்லா ஓடும்'' என்கிறார் மனோகர். இவர் ஏற்கெனவே பத்துப் படங்களுக்கு மேல் வசனம் எழுதியவர்.

**- கனவன்**

கூட தேயாத பிரபை.

''ஆம்பிளையை நீ புரிஞ்சுக்கிட்டது அவ்வளவுதான். அவன் என்ன தீர்மானிக்கிறானோ அதுதான்... சில சமயம் அந்தத் தீர்மானம் நம்மாலன்னு பொய்யா கௌரவப்படுத்துவான்...''

''என்னம்மா... நம்ம திரிவேணி அத்தை...ஙேன்னு இருந்துக்கிட்டு... மாமாவை எப்படி கையில வச்சிருக்கா.''

''திரிவேணி அத்தை பேர்ல எவ்வளவு சொத்து இருக்குன்னு தெரியுமா... மாமா அடங்கிப் போனது சுயநலத்துல... அவருக்குப் பணத்தாசை... உங்க அப்பாவுக்கு வேற...''

உமாவுக்கு இம்மாதிரி உரையாடல்கள் அலுத்துப் போனதால்தான் வீட்டில் பேச்சைச் சுருக்கியது.

அப்பா எப்போதாவது குடும்பத் தலைவர் வேஷமும் போட்டிருக்கிறார். உமாவைக் கையைப் பிடித்து ஆற்றங்கரைக்கு அழைத்துப் போன சிறு வயசு ஞாபகங்கள்.

'ஏம்பா... ஜலமே இல்லே...?'

'மழை பேஞ்சாதானே.'

'மழை ஏன் பெய்யலே?'

'மரமே இல்லியே... எல்லாத்தையும் வெட்டிட்டா...'

'ஏம்பா... மரத்தை வெட்டறா?'

சங்கிலித் தொடர் போல கேள்விகள். அலுக்காமல் பதில் சொல்லிய அப்பா. இருட்டிய பின்னும், எதிர் உருவம் சரிவர புலப்படாத நிலையிலும், மணல் கோபுரம் கட்டி முடிக்கப்பட்டு கொடி ஏற்றும் வரை பொறுமையாய்க் காத்திருப்பார்.

'அம்மாவும் நம்மகூட வரலாம்ல.

'அவளுக்கு சமையலறை போதும், வான்னா வர மாட்டா.'

'அம்மாக்கு ரசனையே இல்லப்பா...'

அப்பா பதில் சொல்ல மாட்டார். எப்படிச் சொல்வார். அவரால் சிறகு முறிக்கப்பட்ட பறவையைப் பற்றி என்ன சமாதா

ணம் தர இயலும்?

உமாவுக்கு அப்போது அப்பாவைப் பிடித்துப் போனது. அருகே இருக்கிற நேரங்களில் தோழனாய் நிற்கிற அப்பா, சிடுசிடுக்கிற அம்மாவைவிட கூடுதலாய்ப் பிரியம் சம்பாதிக்கிறார்.

**ப**த்து வயதுக்கு மேல்தான் அப்பாவைப் புரிந்துகொள்ள ஆரம்பித்தாள். அதுவும் சீட்டாடப் பணம் கிடைக்காத ரௌத்திரத்தில், அம்மாவின் தலையைத் தாக்கிய டம்ளர். மூன்று தையல்கள். ரத்தச் சொட்டச் சொட்ட நின்ற அம்மா.



"உங்களுக்கு என்ன கடன் வேணும்?"

"தள்ளுபடியாகிற மாதிரியான ஏதாவது ஒரு கடன் கொடுங்க, சார்!

- பாலகோவிந்தராஜ்

அப்பாவின் பிம்பம் அன்று, முதல் முறையாய்த் தகர்ந்தது. இவர் தகப்பன் இல்லை. தகப்பனுக்கு உரிய குணங்கள் இல்லை.

'அப்பா வேணாம்மா.'

'போடி பைத்தியம்.'

அம்மா ஏன் அப்பாவைத் தாங்கிப் பிடிக்கிறாள் என்று புரியவில்லை; இந்த நிமிஷங்கூட. பி.காம். படித்து, வேலைக்கு அமர்ந்த பின்னும், சுயமாய் முயற்சித்து அலுவலகத் தேர்வு எழுதித் தேறி, இன்று கௌரவமாய் இருக்க முடிந்தபோதும், அம்மா அப்பாவின் நிழலில் நிற்பதுபோல ஏன் காட்டிக்கொள்கிறாள்?

"**சா**ப்பிட வர்றியா..?"

அம்மாவின் குரல் கேட்டது.

வேளை தவறாமல் நிகழ்கிற ஒரே வேலை.

"அம்மா..."

"ம்..."

"கையில போடறியா... பிசைஞ்சு?"

அம்மா எதுவும் பேசவில்லை. உள்ளே போனாள். ஒரு ஏனத்தில் கலந்துகொண்டு திரும்பியவளின் இன்னொரு கையில் அப்பளத் தட்டு.

உருட்டிப்போட்ட கவளம் இதமாய் தொண்டைக் குழியில் இறங்கியது. எதிரே அப்பாவும் இதேபோல கை நீட்டி அமர்ந்தால்...

கொடுப்பினை இல்லை. இயற்கை தன் போக்கில் நிர்ணயிக்கிறது.

"கீழே வழியறது பாரு."

"துடைச்சிரலாம்... அம்மா... இப்பவும் சாம்பார்ல நீதான் எக்ஸ்பர்ட்... அதே டேஸ்ட்."

"ஒரே புழுக்கமா இருக்குடி."

"போம்மா. ஐஸ் வைக்கிறேன்னு கிண்டல் பண்றியா?"

மீண்டும் உருண்டையைக் கையில் போட்ட அம்மாவிடம், "உன்கிட்டே நல்ல புடைவையே இல்லியா... எம்மா... பிடிவாதமா பழசையே கட்டிக்கறே...?"

"யாருடி தினகர்...?"

அம்மா பதில் கேள்வி கேட்டதும் உமாவுக்குப் புரையேறியது. தும்மியதில் சாதம் தெறித்தது.

"அம்மா..."

"யாரு... தினகர்... சொல்லு?"

**(தொடரும்)**

# பை நிறைய பாராட்டு!

சங்கீதக் குடும்பத்தில் பிறக்கவில்லை யென்றாலும், இசை இவரை இளம் பருவத்திலேயே வசப்படுத்தி சங்கீத உலகுக்கு இழுத்து வந்து விட்டது. புதுமைகள் செய்ய வேண்டும், அதே சமயம் அவை கர்நாடக சங்கீதத்தின் பிராசீனத்தைப் புறந்தள்ளி விடக்கூடாது என்பதை உணர்ந்து இசைக் கச்சேரிகள் செய்து வரும் இளைஞர் குல்தீப் பை. கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸுக்காக காலையில் நாரத கான சபா மினி ஹாலில் இவர் கச்சேரி.

'வனஜாக்ஷி' கல்யாணி வர்ணத்துடன் ஆரம்பம் கனஜோர்தான்! குல்தீப் கல்யாணியின் நிஷாதத்துக்கு பிரத்யேகமாகத் தந்த அசைவு மிக அழகு. ஆனால், வர்ணங்களுக்கு கற்பனை ஸ்வரங்களைச் சேர்ப்பது அநாவசியம். வர்ணங்களே அதன் முக்தாயி, எத்துக்கடை ஸ்வரங்களில் ராகத்தின் அழகை அள்ளிக் கொண்டு வந்து விட்ட பிறகு, பொழிந்து தள்ளிய கல்பனா ஸ்வரங்கள் கைத்தட்டலுக்காக வந்த நயமற்ற ஓசைதான். ஆனால், அன்று குல்தீப் நவனீதம் என்ற 40வது மேளகர்த்தா ராகத்தை எடுத்து விரிவாகக் கையாண்டதற்குப் 'பை' நிறைய பாராட்டு வழங்கலாம். விவாதி என்ற வகையைச் சேர்ந்த நவனீதம் போன்ற ராகங்களை, விவகாரமாக்காமல் அழகுணர்ச்சி கெடாமல் மிக ஜாக்கிரதையாகப் பாட வேண்டும். குல்தீப் சாதுர்யமாக ராக ஆலாபனை செய்து, தியாகராஜரின் 'லேமி தெல்ப பெத்தலெவரு' என்ற கிருதியைப் பாடி, 'நீரூபமுக' என்ற சரணத்தில் நிரவலும் செய்து, பின் நவனீதத்தின் நிஷாதத்தைக் குறிவைத்து பலமான ஸ்வர அமைப்புகள் தொடுத்து, ஜெயித்துக் காட்டினார்!

காம்போதி பெரும்பாலும் மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில்தான் பிரகாசிக்கும். அதனால் பல பாடகர்கள் இதை உணர்த்த உச்சஸ்தாயியில் போய் உட்கார்ந்து கூச்சலிட ஆரம்பித்துவிடும் அபாயம் உண்டு. குல்தீப் அப்படிச் செய்யவில்லை. நிதானம் தவறாத எழில்மிக்க கார்வைகள், மிருதுவான அகாரங்கள் மூலம் மேல்ஸ்தாயி பிரயோகங்களைக் கொண்டுபோய், உச்சஸ்தாயி ஸ்வரங்களையும், மத்தியம காலப் பகுதிகளையும் விரிவுபடுத்தி வழங்கியது காதுகளுக்கு இதமாக இருந்தது. 'காணக் கண்கோடி வேண்டும் கபாலியின் பவனி' என்ற பாபநாசம் சிவனின் பாடல் தெளிவான உச்சரிப்புடன் வந்தது. குல்தீப் இந்த ஆண்டு வாங்கிய டி.கே. பட்டம்மாள் விருதுக்குத் தகுதியானவர் என்பதை நிரூபித்தது.

வயலின் வாசித்த பாலகிருஷ்ணன், 'பை'க்கு நல்லவிதமாகக் கைகொடுத்தார். ஆர்ப்பாட்டமற்ற ஆதரவு. டெல்லி சாய்ராமும், வெங்கடரமணனும் (மிருதங்கம், கஞ்சிரா) இளைஞர்களே. அதனால் நிரவல், ஸ்வர சந்தர்ப்பங்களில் தூள் கிளப்பினார்கள்.

**- தேவவிரதன்**



# தொடரும் பாஞ்சாலிகள்!




## பாவம் பயணிகள்

அண்மையில் மத்திய ரயில்வே அமைச்சர் லாலு பிரசாத் பாட்னா ரயில் நிலையத்துக்கு, தன் பாதுகாப்புப் படைசூழ வந்தபோது, ரயில்வே ஸ்டேஷனை ஒட்டிய பகுதியில் ஏற்பட்ட டிராஃபிக் ஜாமில் சிக்கிக்கொள்ள நேரிட்டது. வேறு வழி இல்லாமல், ரயில் நிலையம் வரை லாலு நடந்து வரும்படியானது. லாலுவுக்கு வந்ததே கோபம். அதிரடியாக, தான் வருவதற்கு முன்னால் போக்குவரத்து நெரிசலை சரிசெய்யத் தவறியதற்காக, ரயில்வே போலீஸ் அதிகாரியை உடனடியாக டிரான்ஸ்ஃபர் செய்து உத்தரவிட்டார்.

பிரச்னை அத்துடன் முடியவில்லை. புதிய ஆர்.பி.எஃப். அதிகாரி ரயில் நிலைய வளாகத்துக்குள் ஆட்டோ, டெம்போக்கள் நுழைய தடைவிதித்து விட்டார். பலன்? பயணிகள் தவிக்கிறார்கள். சாமான்களை பிளாட்ஃபாரம் வரை எடுத்துச் செல்ல அறுபது, எழுபது ரூபாய் வரை கேட்டு போர்ட்டர்கள் பயணிகளைப் பிழிந்தெடுக்கிறார்கள். பயணிகள் தங்கள் அசௌகரியம் பற்றிப் புகார் செய்தால், 'எல்லாம் மேலிட உத்தரவு! என்ன செய்ய?' என்று பதில் வருகிறது.



● லாலுபிரசாத்

## மிரட்டும் மத்திய அமைச்சர்

பீகாரைச் சேர்ந்த மத்திய துணை அமைச்சரான தஸ்லிமுதீன் மீது ஏற்கெனவே நிறைய கிரிமினல் குற்றச்சாட்டுகள் உண்டு. அதில் லேட்டஸ்ட்டாகச் சேர்ந்துள்ளது, பீகாரைச் சேர்ந்த பெரிய கட்டுமான நிறுவனம் ஒன்றின் பங்குதாரரான அஜய் குமார் ஜாவின் புகார். 'அமைச்சரின் மிரட்டலுக்குப் பணிந்து ஏற்கெனவே ஏராளமாகப் பணம் கொடுத்திருக்கிறேன். இப்போது, இரண்டு கோடி ரூபாய் தரவேண்டும்; இல்லாவிட்டால் இப்போது கம்பெனி நிறைவேற்றிக் கொண்டிருக்கும் 64 கோடி ரூபாய் மதிப்புள்ள ரோடு வேலைகளை நிறுத்தச்

செய்வேன் என்று மிரட்டு கிறார்' என்று போலீசில் புகார் கொடுத்திருக்கிறார். ஆனால் மந்திரியோ, ''நான் அவரை மிரட்டவே யில்லை; 64 கோடி அரசாங்க காண்டிராக்ட் ஆயிற்றே! வேலை ஒழுங்காக நடக்கிறதா?' என்று விசாரித்தேன். அவ்வளவுதான். என்னைப் பற்றி மக்கள் மத்தியில் தவறான அபிப்பிராயம் ஏற்படுத்த இப்படி அவதூறுப் பிரச்சாரம் நடக்கிறது'' என்கிறார்.




### லஞ்ச ஊழலில் சிக்கிய சரஸ்வதி

**ச**மீபத்தில் பாட்னா நகரில் பீகார் கவர்னர் வெளியிட்ட ஒரு புத்தகம் மாநிலத்தின் கல்வித்துறை வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. புத்தகத்தின் தலைப்பு: பொது வாழ்க்கையில் லஞ்ச ஊழல் - காரணங்களும், தீர்வுகளும். புத்தகத்தை எழுதியிருப்பவர்: ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியும், பீகார் மகதா பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணை வேந்தருமான அபிமன்யு சிங். பல்கலைக்கழக அளவில் கல்வித்துறையில் நடந்த ஊழல்களைப் புட்டுப் புட்டு வைத்திருக்கிறார். ஊழலின் ஊற்றுக்கண் என்று பீகாரின் இரண்டு முன்னாள் முதலமைச்சர்கள், ஒரு அமைச்சர் மற்றும் சில உள்ளூர் எம்.எல்.ஏ.க்களைப் பட்டியலிடுகிறார். குறிப்பாக பிஹெச்.டி. சேரும் மாணவர்கள் விஷயத்தில் ஏராளமான லஞ்சம் புழங்குவதாகக் குற்றம்சாட்டி இருக்கிறார்.



✱ தஸ்லிமுதீன்

### மீண்டும் மகாபாரதம்

**பீ**காரில் ஷேக்புரா என்ற பகுதியைச் சேர்ந்த மொகமது மோக்தர், தன் நண்பர்கள் நால்வருடன் சூதாடி, தன்னிடமிருந்த பணத்தைத் தோற்றுவிட்டார். அடுத்து அவர் கட்டின பெட் அவரது மனைவி. மறுபடியும் தோல்வி. நண்பர்கள், நேரே மோக்தரின் வீட்டுக்குப் போய்க் கதவைத் தட்டினார்கள். 'உன் கணவர், உன்னை வைத்து சூதாடித் தோற்றுவிட்டார், ம் புறப்படு எங்களோடு!' என்று சொல்ல, அந்தப் பெண்மணி, அதிர்ச்சிக்குள்ளானார். 'என்னை வைத்து சூதாட அவர் யார்?' என்று கேட்டுவிட்டு, தன் இரண்டு குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு, நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விட்டார். போலீஸ் அதிகாரி ராஜேஷ்குமார் இதுபற்றி இப்போது விசாரணை நடத்திக் கொண்டிருக்கிறார். ''சூதாடிய நாலு பேரையும் நாலு தட்டுத் தட்டி இருக்க வேண்டாமா? விசாரணை என்ன வேண்டிக்கிடக்கு?'' என்று சில பெண்கள் அமைப்புகள் குரல் கொடுத்துள்ளன.

**- சந்திரமௌலி**

# தற்கொலையைப்

**சமீபத்தில் ஐ.நா. சபையில் உரையாற்றி விட்டு வந்துள்ள மாநிலங்களவை உறுப்பினர் திருச்சி சிவா, தமது அமெரிக்க பயண அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார்...**

★ அமெரிக்கா குறித்து படித்ததற்கும் கேள்விப்பட்டதற்கும் மாறாக, பல விஷயங்களை நேரில் உணரக்கூடிய வாய்ப்புகள் அங்கு அமைந்தன.

★ சட்ட விதிகளுக்குக் கட்டுப்படுகிற மக்கள், சட்டத்தைத் தங்கள் வசதிக்கு வளைக்க முனையாத அரசு நிர்வாகம்.

★ பொது இடங்களில் சீர்குலையாத வரிசை முறை. எந்த இடத்திலும் வரிசை உடைவதில்லை. எல்லாவற்றிலும் ஒரு ஒழுங்குமுறை. சட்டத்துக்குப் பயந்தல்ல இயல்பாக இப்படியிருப்பது விசேஷம்.


★ திருச்சி சிவா

★ வழவழப்பான இடையூறு இல்லாத சாலைகள். நவீன எந்திரங்கள் அமைந்த வாகனங்கள். இருப்பினும் நெடுஞ்சாலைகளில் வாகனங்களின் வேகக் கட்டுப்பாடு கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப் படுகிறது. அதிகபட்ச வேகம் ஒரு மணிக்கு 65 மைல். (அங்கு மைல் அளவுதான் குறிப்பிடப் படுகிறது.)

★ இந்த வேகத்தை மீறி எவரும் விரைந்து செல்வதில்லை. வேகக் கட்டுப்பாட்டை மீறுபவர்கள் கடும் தண்டனைக்குள்ளாகிறார்கள். சிக்னல்களில் சிவப்பு

# பார்த்திராத 'நயாகரா'

விளக்கை மீறிச் செல்வோர்க்கு நூறு டாலர் அபராதம். ஓட்டுநர் உரிமம் புத்தகத்தில் இரண்டு பாயின்ட் குறியிட்டு செய்யப்படுகிறது. பத்து பாயின்ட் பெற்றுவிடும் ஓட்டுநரின் உரிமம் உடனடியாக ரத்தாகி விடுகிறது. அதற்குப்பின் அவருக்கு ஓட்டுநர் உரிமம் கிடைக்காது.

★ அமெரிக்கர்கள் வெளிப்படையான வாழ்க்கையாளர்கள். 'கேசினோ' இடங்களில் மட்டும் சூதாட்டம். காபரே விடுதிகளில் நடனக் களியாட்டம். நம்மூரில் 'மனமகிழ் மன்றம்' என்கிற பெயரில் மறைந்துகொண்டு நடைபெறும் 'சூதாட்டம்' அங்கு இல்லை. எதிலும் அங்கு ஒளிவுமறைவு ஒன்றும் இல்லை.

எதிலும் விருப்பம் உள்ளவர்கள் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளலாம். இது இப்படித்தான் எனத் தெரியவருகிறபோது, விரும்புபவர்கள் அதனை ஏற்கலாம். விரும்பாதவர்கள் விலகிச் செல்லலாம்.

★ அமெரிக்காவிலும் 1930களில் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. மக்களுக்கு வேலையும் உணவும் தந்திட வேண்டும். என்ன செய்யலாம்? அப்போதுதான் அமெரிக்க அரசு சுரங்கப் பாதை அமைக்கும் திட்டத்தைக் கொண்டு வந்தது.

நிலத்துக்குக் கீழேதான் சுரங்கப் பாதை என்றில்லை. இங்கு மிக நீளமான நதிகளுக்கு அடியிலும், கடலுக்குக் கீழேயும் சுரங்கப் பாதைகள் உருவாகின. ஹட்சன் நதிக்குக் கீழே அமைந்திருந்த சுரங்கப் பாதையில் பயணித்தோம். நம் தலைக்கு மேலே நதி ஓடிக் கொண்டிருக்கிறது என்பதே ஒரு சுகமான அதிசய அனுபவம்தானே?

★ நயாகரா நீர்வீழ்ச்சியின் ஒருபுறம்

அமெரிக்கா. மறுபுறம் கனடா. இடையில் ஒரு பாலம்.

இயற்கையின் பிரமிப்புகளில் ஒன்று நயாகரா. அதனருகில் நிற்பதே ஆனந்தம். நீர்வீழ்ச்சிப் பகுதியில் அதிகமான பாதுகாப்புத் தடைகள் ஏதுமில்லை. இருந்தும் அந்தப் பகுதிகளில் கோழைத்தனமான தற்கொலைச் சம்பவங்கள் ஏதும் இதுவரை நிகழ்ந்ததில்லை என்பது ஆச்சர்யம்.

தங்கள் நாட்டின் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இடத்தின் புனிதத்தை, தற்கொலை மரணத்தால் கெடுக்க முனைந்திடாத அமெரிக்கர்களின் அக்கறையான சிந்தனை அசரவைக்கிறது.

★ ஐக்கிய நாடுகள் சபையின், 63 வது பொது மகாசபைக் கூட்டத்தில் பங்கேற்கவே இந்தியக் குழுவில் நாங்கள் ஒன்பது பேர் சென்றிருந்தோம். 'ஐ.நா. மன்றத்தின் பொது மகா சபையை வலிமையுள்ளதாக ஆக்குதல்' என்கிற தலைப்பில் உரையாற்றிட, இருபத்தைந்து நாடுகளின் பிரதிநிதிகளுக்கு வாய்ப்பளிக்கப்பட்டிருந்தது. அந்தத் தலைப்பில் இந்தியாவின் குரலாக என் பேச்சினைப் பதிவுசெய்தேன்.

★ இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த பின்னர், நாடுகளிடையே ஏற்படும் பிரச்னைகள் பெரிய அளவில் உலகைப் பாதிக்காமல் தவிர்ப்பதற்காக உருவானதே ஐக்கிய நாடுகள் சபை.

★ உலகின் 192 நாடுகள், அதில் உறுப்பினர்களாக அங்கம் வகிக்கின்றன. அதில் ஒன்று இந்தியா.

★ பொது மகா சபை, பாதுகாப்பு சபை என இரு சபைகள் ஐ.நா.வில் இயங்குகின்றன. பொது மகா சபையில் அனைத்து உறுப்பு நாடுகளும், பாதுகாப்பு சபையில் வல்லரசு நாடுகள் ஐந்தும் அங்கம் வகிக்கின்றன.

★ பாதுகாப்பு சபைதான் வலுவானது. அதிகார பலம் மிக்கது. இந்தியா அதில் ஒரு உறுப்பு நாடாக இடம்பெற்றிட முனைந்து வருகிறது. அதற்குப் பல நாடுகளின் ஆதரவும் பெருகி வருகிறது. அடுத்த அமெரிக்கப் பயணத்துக்குள் இந்தியா உறுப்பு நாடாக இடம்பெற்றுவிடும் என்று உறுதியாக நம்புகிறார் திருச்சி சிவா.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**"எந்த விஷயத்திலும் ஒளிவு மறைவு ஒன்றும் இல்லை அமெரிக்கர்களிடம்"**

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்

நிர்வாக அலுவலகம் : 16, இரண்டாவது மெயின் ரோடு, கோட்டூர்புரம், சென்னை - 600 085.
போன்: **24471936 / 2447 2540**
**E.Mail : prb@vsnl.com Website : http://personal.vsnl.com/kmaw_trust**

## வேண்டுகோள்



- ஸ்ரீ காஞ்சி மாமுனிவரின் ஆக்ஞைப்படி அவர் அருளுடன் இந்த டிரஸ்ட் 1986ல் ஸ்தாபிக்கப்பட்டது.
- தமிழ் நாட்டில் உள்ள பழைமையான கிராமக் கோவில்களில் பூஜை செய்யும் மிக ஏழ்மை நிலையில் உள்ள பூசாரிகள் உள்ளிட்ட அர்ச்சகர்களுக்கு ஒவ்வொரு மாதமும் உதவிப்பணம் அளிக்கப்படுகிறது.
- ஸ்ரீ மஹா பெரியவாளின் மேலான அருளுரைப்படி இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்குமாறு ஆஸ்திக அன்பர்களை வேண்டிக் கொள்கிறோம். ரூ.4,000/-க்கு மேல் மாத மொத்த வருமானம் பெறுபவர்கள் தங்களது ஒரு மாத மொத்த வருமானத்தை தங்கள் வாழ்நாளில் அவர்களுடைய சௌகர்யப்படி, மொத்தமாகவோ அல்லது பல தவணைகளிலோ நன்கொடையாக கொடுத்து உதவுதல் நலம் என ஸ்ரீ மஹா சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள். அவரவர்கள் தங்களால் இயன்ற அளவு அளிக்கும் நன்கொடையை நன்றியுடன் பெற்றுக் கொள்வோம்.
- நன்கொடைகளை க்ராஸ் செய்த காசோலை அல்லது டிமாண்ட் டிராப்டாக ***"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"*** என்ற பெயரில் சென்னையில் ஏதாவதொரு வங்கிக் கிளையில் பெறுமாறு நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பவும்.
- தற்சமயம் இந்த டிரஸ்ட் கிராமங்களிலுள்ள 325 ஏழை அர்ச்சகர்களுக்கு மாத உதவித் தொகையாக ரூ. 800/-ஐ வழங்கி வருகிறது.
- ஒவ்வொரு ஆண்டும் மாத உதவி கோரும் ஏழை அர்ச்சகர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதாலும், முதலீடுகளின் பேரில் வரும் வட்டி விகிதம் வேகமாக குறைந்து வருவதாலும், டிரஸ்டின் மூலதனத்தை உடனடியாக அதிகரிக்க வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுள்ளது. ஆகையால் ஸ்ரீ காஞ்சி மகானின் அருளாக்ஞையின்படி தங்களுடைய நன்கொடைகளை விரைவில் அனுப்பி உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**C.V. Narasimhan, I.P.S., (Retd)**
பொறுப்புக் குழுவின் தலைவர்.

# விருது

"சட்டையை உரித்துக் கொள்ளாத பாம்பு செத்து ஒழியும்; மாற்றத்தை ஏற்காத சமூகமும் அவ்வாறே" - என்பார் அறிஞர் நீட்சே. இது எல்லாத் துறைக்கும் பொருந்தும். அதிலும் உடனடி மாற்றம் தேவைப்படும் துறை வேளாண் துறை. விளைநிலங்கள் வீடுகளாகி, வயல்வெளி பரப்பு சுருங்கி, எண்ணற்ற பயிர் வகைகள் வெறும் பெயர்களாக நின்று, பெருகி வரும் மக்கள் தொகைக்கு ஈடு கொடுக்க முடியாமல் திணறி நிற்கும் நெல் உற்பத்தி... வரவிருக்கும் உணவுப் பஞ்சத்துக்கான அபாயச் சங்கொலி. என்ன செய்யலாம், எதை மாற்றலாம்? இருப்பதைக் கொண்டே பெருக்குவது எப்படி? ஆபத்பாந்தவனாய் அபய கரம் நீட்டியதுதான் 'செம்மை நெல் சாகுபடி.'

இது புதிய நெல் அல்ல; புதிய விவசாய சாகுபடி முறை. அவ்வளவுதான். இந்தச் சாகுபடியைப் பரவலாக்கி உணவு உற்பத்தியைக் கூட்டிய பணிக்காகவே ஒருவர் அரசின் விருதை சாகுபடி செய்திருக்கிறார்.



* எஸ்.சிவராஜ்

"இந்தியாவிலே இச்சாகுபடியில் தமிழகம் முதலிடம். மாநில அளவில் திருச்சி முதன்மையான இடம். அதனால் எனக்கு இவ்விருது" என்கிறார் திருச்சி வேளாண்மை துணை இயக்குனர் எஸ். சிவராஜ்.

மடகாஸ்கர் தீவுதான் செம்மை நெல் சாகுபடி முறையின் பிறப்பிடம். ஒரு தனியார் தொண்டு நிறுவனத் தலைவரான பாதிரியார் லவ்லி லியோனி என்பவர்தான் இதைக் கண்டு பிடித்தார். ஆய்வு செய்து பரீட்சார்த்த முறையில் சாகுபடி செய்து வெற்றி கண்ட ஆண்டு 1987.

"கடந்த இருபது வருடங்களுக்குள், உலகின் முப்பத்தைந்து நாடுகளில் தற்போது மேற்குறிப்பிட்ட சாகுபடி நடைபெற்று வருகிறது.

இதர சாகுபடி முறையைக் காட்டிலும்,

செம்மை நெல் சாகுபடியானது ஒரு ஏக்கருக்கு மொத்தச் செலவில் சுமார் மூவாயிரம் ரூபாயை மிச்சப்படுத்தக்கூடியது. ஏற்கனவே ஆகிவந்த அறுவடையில் இரண்டு மடங்கு மகசூல் தரக்கூடியது. இத்தனை எளிய, ஏற்றம் தரக்கூடிய சாகுபடி முறை இந்தியாவுக்குள் எட்டிப் பார்த்தது, கடந்த ஆறேழு ஆண்டுகளுக்குள்தான். இந்திய வேளாண்துறை செம்மை நெல் சாகுபடி முறையினை, அனைத்து

# சாகுபடி!




மாநில விவசாயிகளும் நடைமுறைப்படுத்த வேண்டுமென திட்டமிட்டுச் செயல்படுகிறது. காரணம், எதிர்காலத்தில் உணவுப் பஞ்சம் வந்து விடுமோ என்கிற பெரும் அச்சம்.

வருடத்துக்கு 143 மில்லியன் டன் நெல் உற்பத்தி ஆகிறது. 2050ல் இந்தியாவின் மொத்த நெல் உற்பத்தி தேவை 450 மில்லியன் டன். மூன்று மடங்கு நெல் உற்பத்திக்கு எங்கே போவது? இந்நிலையில் நமக்கு கரம் கொடுத்து கரை சேர்க்க வந்துள்ளதே செம்மை நெல் சாகுபடி. எதிர்காலத்தில் உணவுப் பஞ்சத்திலிருந்து நம்மைத் தற்காத்துக் கொள்ள இது ஒன்றுதான் சிறந்த வழி'' என்கிறார் எஸ். சிவராஜ்.

''கடந்த குறுவை பருவத்தில் ஒரு ஏக்கரில் செம்மை நெல்சாகுபடி செய்திருந்தேன். முதலில் எனக்கு நம்பிக்கை இல்லை. அறுவடை ஆன பிறகு, எடை போட்டோம். என்னால் நம்பவே முடியவில்லை. ஒரு ஹெக்டேருக்கு 11.560 டன் என்கிற அளவில் நெல் உற்பத்தி கண்டிருந்தது. கடந்த குறுவை பருவத்தில் திருச்சி மாவட்டத்தில் மிக அதிக மகசூல் கண்டு முதலிடம் பிடித்து, சிறந்த விவசாயி என்ற பெயரைப் பெற்றுள்ளேன்'' என்கிறார் தத்தமங்கலம் சுப்ரமணியம்.

''ஒரு ஏக்கருக்கு இரண்டு கிலோ விதை நெல்லுன்னு ஆரம்பிக்கற சிக்கனம் கடைசி வரைக்கும் நமக்குத் தொடருது. மார்க்கர் கருவி கொண்டு நடவு நடணும். பத்துநாள் இடைவெளியில் கோனாவீடர் கருவியால நாலு தபா சேற்றைக் கலக்கி, களைகளை வயல்லயே அமுக்கி விடணும். களையெடுக்க ஆள் தேவையில்லை. இயற்கை உரம் போடணும். ஒவ்வொரு பயிர்லயும் எண்பது தூர் வரை கிளைக்கும். ஒவ்வொரு தூர்லயும் அறுபது தூர்கள் வரை கெடைக்கும். ஆங்... சொல்ல மறந்துட்டோம்! எப்பவும் பாய்ச்சற தண்ணியில பாதி அளவு பாய்ச்சினா போதும். சாகுபடியில உற்பத்தி ரெண்டு மடங்குன்னா கசக்கவா செய்யும்?'' எனக் கேட்கிறார்கள் மான்பிடி மங்கல கிராம விவசாயிகள்.

விருதுபெற்ற இயக்குநர், விவசாயிகளுக்குப் புரிய வைத்தல் - செயல்படுத்தல் ஆகியவற்றில் நன்றாகவே பயிற்சி கொடுத்துள்ளார் என்பதற்குச் சாகுபடியே சான்றளிக்கிறது.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




# திருமாவுக்கு திக்...திக்!

● கருணாநிதியின் அரசியல் சாணக்கியத்துக்கு சவால் விடும் வகையில், அதிரடியாக திருமங் கலம் சட்டமன்றத் தொகுதியில் களமிறங்குகிறார் ஜெ. இதன் மூலம் பாராளுமன்றத் தேர் தலுக்கு முன்னர், தமது அணி யினரைத் தயார் நிலைக்கு எடுத் துச்செல்லவிருக்கிறார். ''எதற் காக இந்த அதிரடி?'' என்று மூத்த அ.இ.அ.தி.மு.க. பிரமுகரி டம் கேட்டோம். ''ரொம்ப சிம்பிள். திருமங்கலம், முக் குலத்தோர் கணிசமாக உள்ள தொகுதி. அடுத்து அழகிரியின் தேர்தல்கால அத்துமீறல்களை யும், அதிகார துஷ்பிரயோகங் களையும் பட்டியலிட, மக்களி டையே கொண்டு செல்ல நல்ல வாய்ப்பு. இதன் காரணமாக தி.மு.க. அணிக்கு எதிராக அனைவரையும் ஓரணியில் திரட்ட ஒரு சந்தர்ப்பம். ம.தி.மு.க. போட்டியிட்டால் எதிர்பார்க்கும் உஷ்ணம் கிளம்பாது. தோற்றால் ஆளும்கட்சியின் தில்லுமுல்லு காரணமாகத் தோற்றோம் என்று சொல்லலாம். ஜெயித்தால்... அது எங்களுக்கு பூஸ்ட் அல்லவா?'' என்று சொல்லிச் சிரித்தார். எது எப்படியோ அடுத்த ஒரு மாதம் மதுரையில் சித்திரைத் திருவிழாதான். இதற்கிடையில் பா.ம.க. திருமங்கலம் இடைத் தேர்தலில் நடுநிலை வகிக்கும் என்று பலமாகக் கிசுகிசுக்கப்படுகிறது.

● ''எங்கள் நிலைதான் மிகவும் தர்மசங்கடமாக இருக்கிறது. தி.மு.க. - அ.தி.மு.க.வை விமர்சனம் செய்து கட்சி வளர்த்தால், அந்தக் கட்சிகளுடன் கூட்டணி அமைக்க முடியாது. தனியாகப் போட்டியிட் டாலும், அதிக வோட்டு வாங்கினா லும் ஒரு பாராளுமன்றத் தொகுதி யில்கூட வெற்றிபெற முடியாத நிலை. அதே சமயம் இரண்டு பாராளுமன்றத் தொகுதிகளில் வென்றால்தான் தேர்தல் கமிஷனின் அங்கீகாரம் பெற்று சட்டமன்றத் தேர்தலில் நிரந்தரச் சின்னத்துடன் போட்டியிட முடியும். தி.மு.க.வோ எங்களைத் தனியே போட்டியிட வற்புறுத்துகிறது. வோட்டுக்களைப் பிரித்து வெற்றி பெறுவது அதன் நோக்கம். அம்மாவோ எங்களோடு வா... வா என் கிறார். 'எங்களோடு அணியில் சேர வேண்டாம். ஆனால் எங்களோடு ஒரு உடன்பாட்டுக்கு வரலாம்' என்கிறது காங்கிரஸ். கேப்டனுக்கு சரியான மண்டை யிடி'' என்கிறார் தே.மு.தி.க. பிரமுகர்.

● தி.மு.க. அணியிலுள்ள திருமாவளவன் எப்படி யாவது தாம் போட்டியிட ஒரு பாராளுமன்றத் தொகுதியை வாங்கிவிட வேண்டுமென்று துடிக் கிறார். ஆனால் 'புது'வலிமை பெற்றுள்ள காங்கிரஸ், புலிகள் விவகாரம் காரணமாக ''அவருக்கு இதயத்தில் மட்டும் இடம்தர வேண்டும்'' என்று கட்டையைப் போடுகிறது.

- ஸ்ரீநி

## காதைக் குடுங்க!





''தலைவரே உங்களுக்கு நூத்திரெண்டு 'டிகிரி' இருக்குது!''

''எதிர்க்கட்சில எனக்கு 'ஒரு டிகிரி'யாவது இருக்குதான்னு கேலியா கேட்டவங்ககிட்டே இதைச் சொல்லணும்!''

- வெ. சீதாராமன்

''அரசியல்ல ரெண்டு மாசத்துக்கு முன்னாடி சேர்ந்தபோது, 'கத்துக் குட்டி'யா இருந்தார் நம்ம தலைவர்.''

''இப்ப?''

'' 'சொத்துக் குட்டி'யா ஆயிட்டார்.''

- சாயம் வெ. ராஜாராமன்

# கத்துக்குட்டி to சொத்துக்குட்டி

''நீ ஏன் தற்கொலை பண்ணிக்க முயற்சி பண்ணினே?''

''எம்.காம். படிச்சிருக்கேன். ஆறு வருஷமா வேலையே கிடைக்கலை.''

''அடப்பாவி... மனம் தளரவே கூடாது. நம்ம டாக்டரைப் பாரு. பத்தாவது படிச்சுட்டு இப்ப டாக்டரா இல்ல?''

– சாயம் வெ. ராஜாராமன்





''தலைவரே இவனுங்க ரெண்டு பேரும் என் பசங்க, 'ரெட்டை'ப் பிறவிங்க, பேர் வையுங்க!''

''அது சரி... இவனுக்கு என்ன வயசு, அவனுக்கு என்ன வயசு?''

- வெ. சீதாராமன்

கம்பன் நகர் பக்கமாய் வீடு பார்க்கச் சொல்லி இரண்டு நாட்களாய் தொந்தரவு கொடுத்துக்கொண்டிருந்தாள் மெலானி.

''எதுக்கு... அங்கதான் போகணும்னு கேட்கிற...?'' எரிச்சலோடு மெலானியை முறைத்துப் பார்த்தான் செல்வம்.

''பின்ன... எப்பப் பாரு ஒரே அழுக்கா... சாக்கடையும் குப்பையும் இருக்கிற பூமியான்பேட்டைக்கா போவாங்க...''

மெலானி எங்கு வருகிறாள் என்பது செல்வத்துக்குப் புரிந்து போயிற்று. 'சடக்' கென்று கோபம் வந்தது. அடக்கிக்கொண்டு நிதானமாகப் பேசினான்.

''ஏன் மெலானி இப்படிப் பேசற? எல்லா இடமும் ஒரே இடம்தான். பசிச்ச வேளைக்குச் சாப்பிட்டு... தூக்கம் வந்தா தூங்கறதுக்கு ஒரு வீடு வேணும். அது பூமியான்பேட்டையா இருந்தா என்ன?''

''புரியாம பேசாதீங்க... கம்பன் நகர் பக்கமா போனா வீடுங்க எல்லாம் அமைதியா இருக்கும். சண்டை சச்சரவுங்க இருக்காது. மனுஷங்க வர்றது போறது தெரியாது. போதுமா...?''

அதற்கு மேல் செல்வம் மெலானியை ஒன்றும் கேட்கவில்லை.

''சரி... போகலாம் கிளம்பு...'' என்று சொன்னபடியே, தன்னுடைய கைனடிக் சிங் வண்டியை எடுத்தான். பின்பக்கமாய் ஏறி மெலானி உட்கார்ந்ததும் செல்வம் பட்டனை அழுத்த, வண்டி மெல்ல கம்பன் நகரை நோக்கிப் போகத் தொடங்கியது.

செல்வம் தனியார் கம்பெனி ஒன்றில் வேலை செய்கிறவன். மெலானி வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவள். இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் விரும்பி யாருக்கும் தெரியாமல் திருமணம் செய்து இரண்டு வருடங்களுக்கு மேலாகிறது.

செல்வம் கம்பன் நகரின் உள்ளே நுழைந்துகொண்டிருந்தான். சுத்தமான தெருக்கள். ஆள் நடமாட்டம் அதிகம் இல்லாத அமைதியான சூழல். ஒரு வீட்டு மாடியில் 'வீடு வாடகைக்கு விடப்படும்...' என்ற போர்டைப் பார்த்ததும்...''வண்டிய நிறுத்துங்க... நிறுத்துங்க...'' என்று கத்தினாள் மெலானி. செல்வம் வண்டியின் வேகத்தைக் குறைத்து அந்த வீட்டின் ஓரமாய்க் கொண்டுபோய் நிறுத்தினான்.

''ம்...கூப்பிடுங்க...'' என்று அவசரப்படுத்தினாள் மெலானி.



செல்வம் காலிங்பெல்லை அழுத்தினான்.

உள்ளேயிருந்து வயசான ஒரு அம்மா வந்தாள்.

''என்ன வேணும் உங்களுக்கு...?''

''வீடு வாடகைக்கு...''

செல்வம் வார்த்தையை முடிக்கவில்லை. அந்த அம்மாள் உடனே குறுக்கிட்டாள்.

''வீடு மாடியிலதான் இருக்குது. மாசம் வாடகை ரெண்டாயிரம் ரூபா...''

செல்வம் கேட்டான்.

''வீட்டைப் பார்க்கலாமா...?''

''அதுக்கு முன்னாடி ஒரு விஷயம். வீட்ல கறி...மீன்... ஆக்கக் கூடாது. சுத்த சைவமா இருக்கணும்...''

செல்வத்துக்கும் மெலானிக்கும் தூக்கி வாரிப் போட்டது. ஒருவரை ஒருவர் 'திரு... திரு'வென்று விழித்துப் பார்த்துக் கொண்டார்கள்.

''நீங்க சைவமா... அசைவமான்னு சொல் லலையே...''

''அதுக்கும் கேட்டைத் திறக்கறதுக்கும் என்னங்க சம்பந்தம்...?''

''கறி... மீன்... சாப்பிடறவங்களா இருந்தா... நாங்க வீடு வாடகைக்கு விடறதில்லை...''

செல்வம் கோபமாய் அந்த வீட்டு ஓன ரைப் பார்த்துவிட்டு 'சட்'டென்று... ஒன்றும் சொல்லாமல் தன் வண்டியை ஸ்டார்ட் செய்து அந்தத் தெருவைவிட்டுக் கடந்து போனான்.

**''வீ**டுதான் அவங்களுடையது. அதுக்கு நாம வாடகை கொடுத்திடறோம். சாப்பிட றது நம்ம உரிமை இல்லையா? எதைச் சாப்பிடணும்... எதைச் சாப்பிடக் கூடா துன்னு முடிவு செய்யறது நாமதானே...''

''அதானே... இந்த வீடு இல்லாட்டி நமக்கு வேற வீடு...''

மெலானி அப்படிச் சொன்னதற்குப் பின்னணியில் ஒரு காரணம் இருந்தது. அவளால் ஒருநாள்கூட கறி... மீன் தின் னாமல் இருக்க முடியாது.

**இ**ப்போதிருப்பது ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வாடகையில் ஒரு சாதாரண வீடு. ஒரு ஹால்... கிச்சன்... பெட்ரூம்... பாத் ரூம்... லெட்ரின் என்று வீடு ரொம்பவும் சின்னதாய் இருந்தது. செல்வத்தின் வருமானத்துக்கு அந்த வீடே ஜாஸ்தி என்பது போலத் தோன்றியது. ஆனால், மெலானிக்கு இதைவிடவும் வசதியான வீடு வேண்டும் என்பதுதான் லட்சியமாக இருந்தது.

''மரியாள் நகர் பக்கமா நல்ல வீடுங்க இருக்கும்... அங்க போயி பார்க்கலாங் களா...?''

''நம்ம வருமானத்துக்கு தக்க மாதிரி யான எடத்துலதான் நாம வாழணும்''

''நல்லா வாழ்ந்தேன். வசதியான பிரெஞ்சு நேஷனாலிட்டி உள்ளவங்களைக் கட்டிக்கிட்டு பிரான்ஸுக்குப் போயி சீரும் சிறப்புமா வாழாம நீங்கதான் வேணும்னு வந்தேன் பாரு... என் புத்தியச் சொல் லணும்...''

செல்வத்துக்கு நெஞ்சில் முள் குத்தி யது போன்று 'சுருக்'கென்று வலித்தது. வார்த்தைகளினால் ஒரு மனுஷனைக் காயப்படுத்துவதுபோல கொடுமை வேறெதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

''சரி... மெலானி இப்ப எதுக்கு நடந்து போனதைப் பத்தி பேசிக்கிட்டு இருக்கிற...?''

''பின்ன என்னங்க. எனக்கு

# வீடு பேறு

❖ பாரதி வசந்தன் ❖

ஒரு நல்ல வீடு பார்த்துத் தர மாட்டேங்கறீங்க. சொந்தமா வீடும் கட்டித் தர மாட்டேங்கறீங்க...''

''நானா கட்டித் தர மாட்டேன்னு சொல்றேன். பேங்க்ல லோன் வாங்கி பூமியான் பேட்டையில் இருக்கிற நம்ம இடத்தில வீடு கட்டலாம்னா அதுக்கும் வேண்டாங்கற. நல்ல பணக்காரங்களா இருக்கிற இடமா பார்த்துத்தான் வீடு கட்டணும்னா பணத்துக்கு நான் எங்கே போவேன்...?''

''ஏன் உங்க பூமியான்பேட்டை மண்ணை வித்திட்டு... அந்தப் பணத்தில நாம வேற எங்கயாவது வீடு கட்டறது...?''

செல்வம் மெலானியை ஆழமாய் ஏற இறங்க ஊடுருவிப் பார்த்தான். அவள் மனத்தில் இன்னமும் 'நான் வசதியான குடும்பம். பூமியான்பேட்டை மாதிரி ஏழை பாழைங்க வசிக்கிற பகுதியில் வீடு வேண்டாம்' என்கிற நினைப்பு... என்பது செல்வத்துக்கு நன்றாகப் புரிந்து விட்டிருந்தது.

பேசிக்கொண்டே வந்தவர்கள் ரோடியர் மில்லில் வரிசையாய்ப் பல போர்ஷன்களோடு, பார்ப்பதற்கு ஒரு லாட்ஜ் போல் இருந்த வீட்டருகே வந்து நின்றனர். வீட்டின் ஓனர் கேட்டார்.

''நீங்க எங்க வேலை பார்க்கறீங்க...?''

''தனியார் கம்பெனியில...''

''வீடு வாடகை மாசம் ஆயிரத்து எழுநூறு ரூபா... நீங்க... மொத்தம் எத்தனை பேரு...?''

''ரெண்டு பேருதான்...''

''அப்படியானா சரிதான். உங்களை மாதிரி குழந்தைங்க இல்லாதவங்களா இருந்தாத்தான் எனக்கு நல்லது.''

செல்வமும் மெலானியும் ஒன்றும் புரியாமல் பார்த்துக்கொண்டார்கள்.

''குழந்தைங்க இருந்தா... வீடெல்லாம் பென்சிலாலும் கிரேயான் கட்டிங்களாலும் கிறுக்கி வச்சிடுமில்ல. சரி... உங்களுக்கு வீடு கொடுக்கணும்னா நிறைய கண்டிஷன் இருக்கு...''

''சொல்லுங்க...''

''முதல்ல நீங்க... நாய்... பூனை இதுங்களை வளர்க்கக்கூடாது...''

''ஏன்...?''

''அதுங்களால அக்கம் பக்கத்துல சண்டைங்க வரும்...''

''சரிங்க... நாய்...பூனைங்களால சண்டை வரும்னு சொல்றீங்க... அந்தச் சண்டை மனு

**சொ**ந்தப் பிரச்னைக்கு ஒன்று சேர்ந்து போராடவே நேரமும் சூழலும் அமையாத நிலையில்... சமூகப் பிரச்னையில் பங்கேற்றுக் குரல் கொடுத்துள்ளனர் அரவாணிகள். ஈழத்தமிழர்களின் துயர் நீக்கக் கோரி ஒப்பாரி கண்டனப் போராட்டத்தை சென்னையில் அனைத்து அரவாணிகளின் கூட்டமைப்பு ஏற்பாடு செய்திருந்தது. இதில் கலந்துகொள்ள வந்திருந்த ஒரு அரவாணி கொஞ்சம் ஆபாசமாய் உடையணிந்திருந்தார். வந்திருந்த பொதுமக்கள் கவனம் சிதையும்படியிருந்தது. போராட்ட அமைப்பாளர்களுள் ஒருவரான அரவாணி கல்கி, கவர்ச்சி உடையணிந்திருந்த அரவாணியை கூட்டத்தை விட்டு வெளியேறச் சொன்னார். ஒரு துண்டை அவ்வரவாணி



* கல்கி

ஷங்களால வராதா...''

அந்த ஓனர் செல்வத்தை ஒரு மாதிரியாகப் பார்த்தார்.

''நீங்க என்ன ஜாதி...?''

''நாங்க எந்த ஜாதியா இருந்தா உங்களுக் கென்ன. வீடு வாடகைக்கு வர்றவங்ககிட்ட இப்படியெல்லாமா கேள்விங்க கேட் பாங்க...?''

''நான் ஜாதியைப் பார்த்துத்தான் இது வரைக்கும் வீடு விட்டிருக்கிறேன். அது மாதிரி எல்லா டீடெய்ல்ஸையும் இந்த அப்ளி கேஷன்ல ஃபில்அப் பண்ணி நீங்க புருஷன் பொண்டாட்டி ரெண்டு பேரும் கையெ ழுத்துப் போட்டுக் கொடுக்கணும். இதுக்கு சம்மதிச்சா உங்களுக்கு வீடு தருவேன்...''

''இல்லாட்டி...?''

''வீடு கெடையாது...''

''போய்யா சரிதான். நீயும் உன் வீடும்.

மேல் போர்த்தி ஒரு ஆட்டோவை அழைத்து அதில் ஏற்றி அனுப்பி, பொதுமக்களிடம் வருத்தமும் தெரிவித்தார். ''அரவாணிகள் மீதான பாலியல் எண்ணத்தை மாற்றி சமூக அந்தஸ்து பெறும் போராட்டக் காலத்தில் கலா சாரத்தைக் கெடுக்காத உடை அவசியம்'' என் கிறார் மீடியா ஸ்பெஷலிஸ்டான கல்கி. பொதுக்கூட்டத்தில் கவர்ச்சி உடையில் கலந்து கொள்ளும் நடிகையை யாராவது இப்படி சொல்லியிருக்கிறார்களா என்ன? சபாஷ் கல்கி!

- அமிர்தா

வாடகைக்கு வர்றவங்க நல்லவங்களா... கெட்டவங்களா... மாசா மாசம் ஒழுங்கா வாடகை தருவாங்களான்னு பார்க்கல. பெருசா ஜாதியைப் பார்க்க வந்துட்டாரு. இனிமே நீ இந்த வீட்ட சும்மா கொடுத் தாக்கூட நாங்க வர மாட்டோம்யா...''

செல்வம் அந்த ஆளைப் பார்த்து ஒருமை யில் பேசிவிட்டு, மெல்ல அவ்விடத்தை விட்டு நகர்ந்தவாறு மெலானியைப் பார்த் தான். அவள் இதுதான் சரியான சமயம் என்று செல்வத்தை 'பிலு...பிலு'வென்று பிடித்துக் கொண்டாள்.

''நான் சொல்றத நீங்க எங்க கேட்கறீங்க. பூமியான்பேட்டை மண்ணை வித்திருந்தா இந்நேரம் சொந்த வீடு கட்டியிருக்கலா மில்ல. அத விட்டுட்டு இப்படி வந்து நின்னா எல்லாம்தான் பேசுவாங்க...''

செல்வம் பூமியான்பேட்டை மண்ணை விற்றுவிடுவது என்கிற முடிவுக்கு வந்திருந் தான்.

''அப்பாடா... இப்பதான் உங்களுக்குப் புத்தி வந்திருக்குது. அது மாறிடறதுக்குள்ள அந்த சனியன் புடிச்ச பூமியான்பேட்டை மண்ணை வித்துடுங்க...''

''சரி... அப்புறம் வீடு கட்டறதுக்குப் பணம்...?''

''நான் போய் எங்க அம்மாகிட்ட கேட் கறேன். எல்லாம் கேட்கற விதத்துல கேட்டு வாங்கிக்குவேன். நான் ஒண்ணும் உங்களை மாதிரி இல்ல. முதல்ல அந்த இடத்தை விக்கிற வழியைப் பாருங்க...''

செல்வம் தனக்குத் தெரிந்த ரியல் எஸ் டேட் புரோக்கர்கள் எல்லோரிடமும் இதைப் பற்றிச் சொல்லி வைத்திருந்தான். அதில் ஒருவன் 'இடத்தை வாங்குகிற பார்ட்டியிடம் காட்ட வேண்டும். முடிந்தால் நீங்களும் நேரில் வந்தால் நல்லது' என்று சொல்லவே, செல்வம் மெலானியையும் அழைத்துக் கொண்டு பூமியான்பேட்டைக்கு வந்திருந் தான்.

மெலானி செல்வத்தோடு நின்று கொண்டிருந்தாள். காலில் எதையோ நரகலை மிதித்துக் கொண்டவளைப் போல அப்படி யும் இப்படியுமாக நிலைகொள்ளாமல் இருந்தாள். அவள் முகம் 'இந்த இடத்துக்கு வந்து விட்டோமே...' என்று கடுகடுப்பாய் இருந்தது. மெலானிக்கு பூமியான்பேட்டை யின் அந்தச் சூழல் பிடிக்கவில்லை. தெரு விலே கட்டியிருந்த மாடுகளின் சாணி நாற்றமும் குறுக்கும் நெடுக்குமாய் நாய்களின் ஓட்டமும்.

செல்வம் புரோக்கர் வருகிறாரா என்று பார்த்துக் கொண்டிருந்தான். எதிரே கொஞ்ச

தூரம் தள்ளி வயதான பெண்கள் கொஞ்சம் பேர் சூழ்ந்துகொண்டு பரபரப்பாய்ப் பேசுவதும், மேற்கொண்டு என்ன செய்வதென்று புரியாத பயத்தில் அல்லாடுவதுமாய் இருந்ததை மெலானி பார்த்துவிட்டாள். யாரோ அவசர அவசரமாய்ச் சொன்னார்கள்.

''சீக்கிரமா போயி... ஒரு ஆட்டோவைக் கொண்டாங்கப்பா...''

குரல் கேட்டதும் ஒரு சின்னப் பையன் ஜான்சி நகர் பக்கமாய் தலைதெறிக்க ஓடினான். கூடிவிட்ட எல்லோர் முகத்திலும் பதற்றம். இருக்க இருக்க அந்த இடத்தின் சூழலே மாறிக் கொண்டிருந்தது. ஆட்டோ அழைத்து வரப் போனவன் வந்துவிட்டானா என்று அடிக்கொருதரம் திரும்பிப் பார்ப்பதும், அவன் வராத ஏமாற்றத்தில் மனம் பதைப்பதுமாய் இருந்தார்கள். அப்போதுதான் அது நடந்தது. அங்கேயிருந்த ஆண்களையெல்லாம் தூரப் போகச் சொல்லிவிட்டு, பெண்கள் ஒன்றுசேர்ந்து மறைப்புக்காக வைக்கும் தட்டி போல சுற்றி நின்று கொண்டார்கள். கொஞ்சம் பெண்கள் புடவையை விரித்து ஒருவருக்கும் தெரியாமல் பிடித்துக் கொள்ள, பெரும் அலறல் சத்தத்துக்கு நடுவில் புதிய உயிரின் வருகை. அழகான பெண் குழந்தை. அது வீறிட்டுக் கத்தும் அழுகை. எல்லோர் முகத்திலும் சந்தோஷம். அந்தப் புதுத் தெருவே புது மகிழ்ச்சியில் திளைத்ததுபோல் ஆகிப் போனது. எல்லோரும் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு அன்பு மீதூற பேசிக்கொண்டார்கள்.

''யாரு செஞ்ச புண்ணியமோ... இங்கயே சுகப்பிரசவமா ஆயிடுச்சு...''

அங்கு நடந்த எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த மெலானி, அப்படியே அசந்து போய் நின்றவண்ணம் இருந்தாள். அவளுக்கு இது புதுசு. இதுவரை இப்படிப்பட்ட நிகழ்வை ரோட்டில் அவள் பார்த்தது கிடையாது. எல்லாம் அதிசயம் போலத் தெரிந்தது. கண்களை இலேசாகத் தாழ்த்தியபடி மெலானி செல்வத்தின் பக்கம் திரும்பி, வீட்டுக்குப் போகலாம் என்பதுபோல சைகை செய்தாள்.

**வீ**ட்டில் மெலானி, செல்வத்திடம் ரொம்ப சாதாரணமாகச் சொன்னாள்.

''ஏங்க... அந்த பூமியான்பேட்டை மண்லேயே வீட்டைக் கட்டுங்க...''

''என்னாச்சு மெலானி உனக்கு...?''

''எதுவும் ஆகல. பேசாம நான் சொல்ற மாதிரி செய்யுங்க.''

மெலானியின் மனமாற்றம் செல்வத்துக்கு அதிர்ச்சியாயிருந்தது.




''உன் முடிவை இப்படி மாத்திக்குவேன்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கல மெலானி...''

''ஏன்... இதுக்குன்னு தனியா ஒரு தீர்மானம் போட்டுதான் மாத்திக்கணும்னு சொல்றீங்களா...?''

மெலானி கேட்டுவிட்டு இயல்பாகச் சிரித்தாள். அவள் அப்படிச் சிரித்ததும் செல்வத்துக்கு ஏதோ விஷயம் இருப்பதுபோல் தெரிந்தது. வீடு கட்டுவதற்குப் பணம் கேட்பதற்காக, தன் அம்மா வீட்டுக்கு மெலானி போனபோது 'பணம் கேக்க வந்துட்டா. ஓடுகாலி... இங்க எதுக்குடி வந்த... சப்பாத்து பிஞ்சிடும்'னு அவள் அம்மா திட்டியதும்... தான் ஐந்து மாதம் முழுகாமல் இருப்பது தெரிந்திருந்தும், கொஞ்சம்கூட பெற்ற மகள் என்கிற தாய்ப் பாசமே இல்லாமல் விரட்டியடித்ததும்... அந்தப் பகுதியில் குடியிருந்தவர்கள் பார்த்துவிட்டு அவர்கள் பாட்டுக்கு வீட்டுக்குள் போய் கதவைச் சாத்திக் கொண்டதும்... மெலானியின் ஞாபகத்துக்கு வந்தன. அவள் மேடு தட்டிப் போயிருந்த மினுமினுப்பான தன் வயிற்றைக் கைகளால் தடவியபடி கண்கலங்கினாள். ○

## அருள்வாக்கு

# வித்யை



இப்போதுள்ள வித்யைகளும் போதனை முறைகளும் வெற்று லௌகிகத்துக்கும் அகங்காரத்துக்குமே ஆஸ்பதமாக இருக்கின்றன என்பதால், ஆத்மார்த்தமான சாஸ்திரங்களை, கலைகளை, வித்யைகளைக் குறைவாகப் பேசக் கூடாது. இவை எல்லாம் அகங்காரத்தைக் கரைத்து லோகக்ஷேமத்தையும் ஆத்ம க்ஷேமத்தையும் தரவே நம் தேசத்திலே ஏற்பட்டிருந்தன. இப்போதும்கூடப் புதிது புதிதாக விருத்தியாகியிருக்கிற வித்யைகள், டெக்னாலஜி ஆகியவற்றால் எத்தனையோ லோக க்ஷேமத்தை உண்டாக்கலாம்; நல்லறிவை வளர்த்துக்கொள்ளலாம். எல்லா 'எலிமெண்ட்'களுக்கும் மூலமான 'எனர்ஜி' ஒன்றேதான் என்று கண்டுபிடித்துவிட்ட அடாமிக் (அணு) ஸயன்ஸிலேயே நன்றாக ஊறினால், அதுவேகூட ஆத்மிக அத்வைதத்துக்குக் கொண்டு போய் விட்டுவிடும். ஓயாமல் ஆசை வாய்ப்பட்டுப் பறப்பாகப் பறந்துகொண்டிராமல், ஆன்றோர்கள் போட்டுத் தந்த வாழ்க்கை முறையை நாம் மேற்கொண்டு, வித்யைகளை அப்பியசித்து வந்தால், இன்றும் அவை புறத்துக்கு நல்லது செய்யும்; உள்ளுக்கு ஞானமும் தரும்.

மருந்தோடு பத்தியமும் முக்கியம். வித்யை என்கிற மருந்துக்கு அடக்கம், விநயம் என்கிற பத்தியம் அவசியம். இப்போது அது இல்லாததால் மருந்தே விஷமாயிருக்கிறது. ஆனால், அடக்கத்தோடு பயின்றால் வித்யையே உண்மையில் ஞானம் தரும் அமிருதமாகும்.

– ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
சுவாமிகள்



# விடியல்

பஞ்சாயத்து வளாகத்தில்
புதிதாய் நிர்மாணித்த
சறுக்கு, ராட்டினம்
பார்; பார்த்தேன் * விளையாட்டுகள்
சலித்த குழந்தைகள்

தலை காட்டத் தொடங்கிய
பசும் புல்லின் நடுவே
தொட்டால் சுருண்டு கொள்ளும்
ரயில் பூச்சியைச்
சீண்டிப் பொழுது கழிக்கும்

அடிக்கடி
சுருண்டு நிமிர்ந்து - தன்
ஆதிப் பயணம் மறக்கும்
(போன தலைமுறை
வளையல் பூச்சி என்றழைத்த
அது)

தட்டான் பிடித்து கல் தூக்க வைத்து
குட்டையில் இறங்கி தாமரை பறித்து
கள்ளன் போலீஸ், இருட்டுப் பூச்சி
என்று தொடரும் விளையாட்டு

முடிந்துவிட்டது
என்று
தீர்மானித்தவனின்
பாதையில்
தினமும்
நிகழ்ந்து கொண்டிருக்கிறது
விடியல்.

---

* குழந்தைகள் விளையாடும் See; Saw விளையாட்டு

# கலாப்ரியா கவிதைகள்

## I

ஓயாமல்
பேசிக் கொண்டு
நடத்துனரும்
ஒன்றுமே பேசாமல்
ஓட்டுனரும்.





## II

ஒரு குறும்பாவுக்கான
குளிர்ந்த
படிமங்களுடன்
பேருந்து நிறுத்தத்தில்
காத்திருப்பவன்
தலையில்
சூடாய் எச்சமிடும்
ஏதோ ஒரு பறவை



* சேகுவேரா

# மருதன்

மோட்டார் சைக்கிள் ஒரு வளைவில் சறுக்கி விழுந்தது. மிக மோசமான இந்த விபத்தில் சேவின் கால் சிலிண்டரின் கீழே சிக்கிவிட்டது. சிலிண்டர் ஏற்கெனவே சூடாகிப் போயிருந்ததால் காலில் பலத்த புண்.

ஆசையாசையாகக் கட்டி அமைத்த மோட்டார் சைக்கிள் படுத்துக்கொண்டது. லாரியில் அதை எடுத்து வந்து பழுதுபார்த்தனர். சில மணி நேரம் ஓடியது, பிறகு மீண்டும் சுருண்டு கொண்டது. இறுதியில்,

# புரட்சிக்கு முன்பான

ஜனவரி 1952-ல் உற்சாகத்துடன் தொடங்கியது அந்தப் பயணம். எட்டு மாதங்களில் ஐந்து நாடுகளைச் சுற்றி வருவதாகத் திட்டம். பெரிய முதுகுப்பை தயாராகிவிட்டது. உள்ளே ஏராளமான காய்கறிகள், பதப்படுத்தப்பட்ட இறைச்சித் துண்டுகள், ஆந்திய மலைப்பகுதிகளில் தொடங்கி சாண்டியாகோ வழியாக சிலி செல்வதாகத் திட்டம். மலை, ஏரி அத்தனையையும் மோட்டார் சைக்கிள் தாக்குப்பிடிக்க வேண்டும் என்பதற்காக எல்லா முன்னேற்பாடுகளும் தயாராக இருந்தன.

மலைப்பகுதியை நெருங்கும் போதே கோளாறுகள் தொடங்கி விட்டன. **சேகுவேரா** வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தபோது

சாண்டியாகோவில் அதற்கு விடை கொடுத்தனர். மோட்டார் சைக்கிள் பயணம் என்று இந்தப் பயணம் பரவலாக அழைக்கப்பட்டாலும், உண்மையில் மோட்டார் சைக்கிளில் அதிகம் பயணிக்கவே இல்லை என்பது தான் நிஜம்.

கடற்கரையில் அமர்ந்து அலைகளை வேடிக்கை பார்த்தார். மலைச்சரிவுகள் வழியாக நடந்தார். அமேசான் நதியில் மிதந்தார். இடையிடையே சிறுசிறு வேலைகளான சரக்குகளை ஏற்றி, இறக்கினார்; மூட்டை சுமந்தார். மாலுமியாக மாறினார்; காவல் காத்தார்; மருத்துவம் பார்த்தார்; பணம் கிடைத்தது. உற்சாகத்துடன் செலவழித்தார்.

ஏப்ரல் மாதம் பெருவிலுள்ள மச்சு பிக்குவுக்கு வந்து பூர்விக இந்தியர்கள் படும் பாட்டை நேரில் கண்டு கண்கலங்கினார். மச்சு பிக்குவின் வளத்தைச் சூறையாடிய அமெரிக்கர்களைக் கண்டு கொதித்தார்.

ஸான் பாப்லோ பகுதியிலிருந்த தொழுநோயாளிகளின் குடியிருப்புக்குச் சென்றவர்,

பதினைந்து நாட்களை அங்கே கழித்தார். ஒரு பயணி யாகவே சுற்றிக்கொண்டிருந்த சேகுவேரா, தொழு நோயாளிகளைக் கண்டதும் இதமான மருத்துவராக மாறிப்போனார். சமூகம் தொழுநோயாளிகளை விலக்கி வைத்திருப்பது அவருக்கு வேதனை யளித்தது.

அமேசான் நதியைக் கடக்கும்போது

# யாத்திரை!

சேகுவேராவை ஆஸ்துமா கடுமையாகத் தாக்கி யது. போதிய மருந்து இல்லாததால் அவதிப்பட வேண்டி யிருந்தது.

அமெரிக்காவுக்குச் செல்வதற்கு அனுமதி கிடைக் காததால் உடன் வந்திருந்த நண்பர் ஆல்பர்ட்டோ வெனிசூலாவிலேயே தங்கிவிட்டார். சே முயற்சி யைக் கைவிடவில்லை. இறுதியாக பந்தயக் குதிரை களை ஏற்றிச்செல்லும் விமானத்தில் இடம்கிடைத் தது. ஏறிக்கொண்டார்.

மியாமியில் இறங்கியபோது விமானத்தில் கோளாறு. அதைச் சரிபார்க்கும் வரை மியாமியி லேயே தங்கியிருக்க வேண்டிய அவசியம் ஏற்பட் டது. எஞ்சினைப் பழுதுபார்க்க அதிக நாட்கள் ஆகும் என்பதை உணர்ந்த சே, மியாமியிலுள்ள ஒரு சிறிய விடுதியில் தங்கிக்கொண்டார். அமெரிக்காவின் அந்தச் சிறு பகுதியைச் சுற்றிச் சுற்றி வந்தார் சே.

இந்தப் பயணம் மிகவும் விரிவான ஓர் அனு பவத்தை சேகுவேராவுக்கு வழங்கியது. பல்வேறுவித மான மக்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. மிக முக்கியமாக, லத்தீன் அமெரிக்க நாடுகள் குறித்த நேரடிப் பரிச்சயமும் கிடைத்தது.

The Motorcycle Diaries என்ற நூல், முதன் முறையாக க்யூபாவில் 1993ல் வெளிவந்தது. ஒரு புரட்சியாளராக சேகுவேரா பின்னால் மாறுவதற்கும் இந்தப் பயணம் அடித்தளம் அமைத்ததாகச் சொல் கிறார்கள். இது உண்மைக்குப் புறம்பானது. சே தன் கைப்பட எழுதிய சொந்தக் குறிப்பு களோடு இந்தக் கதைகள் பொருந்தவில்லை.

தென் அமெரிக்கப் பயணத் தின் போது சே குவேராவின் அரசியல் பார்வை அத்தனை வளமானதாக இல்லை. அதற்கு ஓர் உதாரணம். லத்தீன் அமெரிக் காவின் மிக முக்கியப் புரட்சி யான பொலிவியாவில் நடை பெற்ற விவசாயப் புரட்சியைப் பற்றி ஒற்றை வரிச்செய்தியைக் கூட சே பதிவுசெய்யவில்லை.

பின்னர், ஃபிடல் காஸ்ட் ரோவைச் சந்தித்தபோதுதான் சேவின் அரசியல் பார்வை விசாலமடைந்து ஒரு புரட்சி யாளராக அவர் மாறினார் என்பதை இந்த நூலின் வாயிலாக உணர முடிகிறது. ●



# 21.12.08 முதல் 27.12.08 வரை

**மேஷம்:** உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் மாற்றம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** அயல்நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். கடன் சுமை தீரும். வீடு/மனை வாங்க உகந்த காலம். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். சனி வழிபாடு செய்து வர நற்பலன் பெருகும்.

**மிதுனம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வாகனங்களில் செல்லும்போது உஷார். வேலைப் பளு அதிகரிக்கும். புதிய தொழில் முயற்சி சற்று தள்ளிப் போகும். வழக்கு தாமதம் ஆகும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும்.

**கடகம்:** மனக் குழப்பம் விலகும். குடும்பம் ஒன்று சேரும். பண வருவாய் பெருகும். கடன் தொல்லை தீரும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். வாக்கு வன்மை மேலோங்கும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற்பலன்கள் கிடைக்கும்.

**சிம்மம்:** இடமாற்றம் உண்டாகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். ஆதலால் எதிலும் கவனம் தேவை. நீண்ட காலக் கடன் சுமை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். சிலருக்கு வீடு மாற்றம் செய்யும் சூழ்நிலை உருவாகும். சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** ரொம்பவும் உல்லாசமான வாரம். சுபநிகழ்ச்சி கைகூடும். உடல் ஆரோக்கியம் சீராகும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். நண்பர்கள் விலகிப் போவார்கள். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். குழந்தைப் பேறு உண்டாகும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வீடு மாற்றம் ஏற்படும். வெளியூர் பிரயாணம் தேடி வரும். கடன் சுமை தீரும். வீடு/மனை வாங்க நல்ல காலம். குழந்தைகள் வழியில் மன மகிழ்ச்சி ஏற்படும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



**விருச்சிகம்:** புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். வேலைப் பளு குறையும். வெளிநாடு சென்று பொருள் ஈட்டி வருவீர்கள். படிப்பில் நன்கு வளம் பெருகும். ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும். புதிய வீடு/மனை வாங்க ஏற்ற தருணம். வழக்கு வெற்றி பெறும். சத்ரு தொல்லை நீங்கும். சனி/குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**தனுசு:** குடும்ப வாழ்வில் இருந்து வந்த மனக்கசப்பு விலகும். பிரிந்த தம்பதிகள் ஒன்று சேர்வார்கள். பண வசதி பெருகும்.

**மகரம்:** தடை விலகி திருமணம் கைகூடும். கணவன் மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகி குடும்பம் ஒன்றுபடும். பண வருவாய் பெருகும். மனைவி வழியில் சுப காரியம் கைகூடும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் விலகி, வராத நிலுவைகள் வந்து சேரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் உண்டாகும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**கும்பம்:** பண வரவு அதிகரிக்கும். உடல்

# நடக்குமென்பார்; நடக்கும்!

வழக்கு வெற்றி அளிக்கும். வராத நிலுவைகள் வந்து சேரும். வாக்குவாதம் தவிர்க்கவும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். கடன்சுமை தீரும். உடல் ஆரோக்கியம் சீராகும். நீண்டகாலப் பிரச்னைகள் தீரும். ராகு/கேது வழிபாடு செய்துவர நல்லது நடக்கும்.

அடுத்த இதழில்... 2009 ஆங்கிலப் புத்தாண்டு பலன்கள் ஆரம்பம்...

நிலையில் இருந்து வந்த தொல்லைகள் விலகும். சத்ரு தொல்லை விலகும். மனச்சலனம் தீரும். எதிர்பார்த்து இருந்த காரியம் வெற்றி அளிக்கும். சொசைட்டியில் நல்ல மதிப்பும் மரியாதையும் பெருகும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். சுபச் செலவுகள் ஏற்படும். சனி/குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**மீனம்:** தொழில் வழியில் நல்ல தன ஆதாயம் கிட்டும். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். வீடு/மனை வாங்க நல்ல நேரம். நண்பர்கள் உதவி கிட்டும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும். ○



✱ எல்லைகளை வகுத்ததில்... அதான் கூட்டணி!






# சமூகத்தின் கையெழுத்து!



✱ வாழ்வு - தலைகீழ் பிம்பம்






✱ என் ப்ரண்ட் SMS அனுப்பியிருக்கா!



* அசலும்... நகலும்!




* நேர கமெண்ட்ஸ்...



* வீடு வந்தா எழுப்புறேன் தூங்கு!



* சின்னராஜ்

ஓவியரும் புகைப்படக் கலைஞருமான சின்னராஜ் கோவையைச் சேர்ந்தவர். தேசிய அளவில் நிகழ்ந்த கலையாசிரியருக்கான போட்டியில் 'தர்ஸன்' விருது பெற்றவர் சின்னராஜ்.

சமீபத்தில் இந்து நாளிதழ் வழங்கிய வித்தியாசமான புகைப்படத்துக்கான பரிசைப் பெற்றுள்ளார். காந்தி சுடப்பட்ட சூழலில் உடனிருந்தபோது காந்தியை படம்பிடிக்காமல், மக்களின் அழுகையை, கதறலை படம்பிடித்து, 'இதுதான் காந்தி' என்ற பிரெஞ்சு புகைப்படக் கலைஞர் ஹென்றி கார்த்திகேயோ பிராஸோனின் பாதிப்பு இவரிடம் நிறைய உண்டு. மீன் பிடிக்க நினைப்பவர்கள் குளத்தைக் கலக்கக் கூடாது என்பது போல், தமது புகைப்பட மாந்தர்களை அவர்களுக்குத் தெரியாமல் யதார்த்தமாய் எடுப்பதுதான் வழக்கம் என்கிறார். தமது புகைப்படத்துக்கு பரிசு கிடைத்தால் அதில் ஒரு பகுதியை அந்தப் படத்திலுள்ளவர்க்கு அன்பளிப்பாய்த் தந்துவிடுவாராம் சின்னராஜ். சமூகத்தின் கையெழுத்தைத் தமது காமிராவில் வரையும் சின்னராஜின் ஸாம்பிள்கள் இவை...

- அமிர்தா

கல்லூரிச் சாலை

# மெடிசன் எங்க...

Vel's College of Physiotherapy-க்கு இந்த வாரம் ஒரு திடீர் விஸிட் அடித்தோம்.. ''என்ன இப்படி 'திடுதிப்பு'ன்னு வந்து நிக்கறீங்க. கால்ல சக்கரத்தைக் கட்டியிருக்கீங்களா? இல்லாட்டா சக்கரத்தைக் கால்ல கட்டியிருக்கீங்களா?'' என்று காலை நேரப் பரபரப்பில் காலைப் பற்றிய அன்பு விசாரிப்போடு ஆரம்பித்தது காலேஜின் 'கலகல' கச்சேரி!

''எங்க காலேஜ்க்குள்ள எப்படி வந்தீங்க?'' என ஆரம்பித்தார் ஜெயச்சந்திரன்.

''ஏன் கேட்கறீங்க? நடந்து தான்...'' என நாம் மொக்கையாய் விளம்ப,

''இதப்பார்றா, அவளா நீ?'' என்று வடிவேலு மாதிரி கேட்டுவிட்டு, ''இப்படித்தான் ஒருத்தர் காலையே நீட்ட முடியாம, செம வலின்னு எங்ககிட்ட வந்தாரு. 'எங்கே

அடிபட்டுச்சு'ன்னு அவருகிட்டே கேட்டா, 'ஆங், பெருமாள் கோவில் சந்துல'ன்னு பதில் சொன்னாரு பாருங்க. அதுமாதிரியில்லேயிருக்கு?'' என்றவரை,

''இதுவாவது பரவாயில்லையே. நாங்க ப்ராக்டிக்கல் ஸெஷனுக்காக நிறைய நோயாளிகளைப் பார்ப்போம். அப்படி ஒரு வாரமா ஒரு குறிப் பிட்ட பேஷண்டைப் பார்த்து என் நண்பன் ஒருத்தன் பாண்டேஜ் போட்டுக்கிட்டு இருந்தான். அன்னிக்கு அதே பேஷண்ட்ட நான் டீல் பண்ண வேண்டி இருந்ததால, நான் அவருக்கு பாண்டேஜ் போட்டு விட்டேனா?'' என கார்த்திகேயன் தொடர, ஒட்டுமொத்த வகுப்பும் 'உம்உம்' என சத்தம் போட்ட படியே சுவாரஸ்யமாக அவரை உற்று கவனிக்க, ''என்ன தம்பி தப்புத் தப்பா பாண்டேஜ் போடறே? நேத்து வரைக்கும் மேலிருந்து கீழ தானே அந்தப் புள்ள என் மூஞ்சில பாண்டேஜ் போட்டான். நீ என்னப்பா தப்புத் தப்பா போட்டு மூஞ்சி யையே டேமேஜ் பண்ணிடுவ போல இருக்கேன்னு





அவரு 'கொய்யோ மொய் யோ'ன்னு கத்த, இத்தனை நாள் அவன் தான் உங்களுக்குத் தப்பா பாண்டேஜ் போட்டான்னு நான் சொன்னா எங்க எகிறிடுமோ 'உத'ன்னு பயந்துக்கிட்டு, 'இல் லீங்கய்யா. உங்களுக்குக் காயம் குணமாக, குணமாக நாங்க ஸைடை மாத்தி, மாத்தி தான் பாண்டேஜ் போடுவோம்'னு சொல்லி நான் ஒருவழியா தப்பிச்சு வந்துட்டேன்'' என்று சொல்லி முடித்து ஒரு பெரிய இடை வெளி விட்டார். க்ளாஸ் முழுதுமே இதற்கு கோரஸாக ஒரு கொட்டாவியைப் பரி சளிக்க, ''என்ன அதுக்குள்ள தூக்கமா, நம்ம செமினார் வகுப்புல நடந்த மாதிரி'' என ஸ்மிதா ஒரு அதட்டல் கொடுக்க,

''எந்த செமினார்ல எப்போ நடந்தது?'' என ஏதோ க்விஸ் ப்ரோக்ராமுக்குத் தயாரா வதைப் போல முகத்தில் கேள்விக்குறி யோடு எல்லோரும் ஸ்மிதாவை எதிர் நோக்க, ''இது போன வருஷம் நடந்தது. ஒரு பையன் ரொம்ப சீரியஸா செமினார் நடத்திக்கிட்டிருந்தான். அவன் செமினாரை முடிச்சதுமே, 'ஏதாவது டவுட் இருந்தா கேளுங்க. எந்த மாதிரி டவுட் இருந்தாலும் தயங்காம கேளுங்க' என மேம் சொல்ல, ஒரு பையன் திடீர்னு எழுந்து, 'மேம் எந்த டாபிக்ல இத்தனை நேரம் செமினார் நடந்தது'ன்னு தூக்கக் கலக்கத் தோடு கேட்க... அதுக்கப்புறம் க்ளாஸ்ல ஒரே லக லக லக லகன்னு ஜோதிகா எபெக்ட் தான்...''

''சரிதான் போங்க... ஜாலியா பெங்களூர் போய்ட்டு கரெக்டா காலேஜ் திறக்கறதுக்கு முன்னாடி நாள்தான் சென்னை வந்து சேர்ந்தோம். ட்ரெயின்ல சரியான தூக்கமே இல்லையா. அதனோட பாதிப்பால க்ளாஸ்ல வந்த உடனேயே செமையா தூங்கிட்டேன். ஸார் வந்து என்னை உலுக்கு உலுக்குன்னு எழுப்ப, 'அம்மா ஸ்டேஷன் வந்ததும் எழுப் புங்கம்மா'ன்னு சொல்லிக்கிட்டே நான் பாதித் தூக்கத்தைத் தொடர, 'ஸ்டேஷன் வந்தாச்சு. எழுந்திருப்பான்னு'ன்னு ஸார் தான் அன்பா சொல்லி என்னை எழுப் பினாரு'' என நண்பரைக் காட்டினர். ''ஓஹோ நண்பருக்குத்தான் உங்க பாஷைல சார்ன்னு பேரா?'' என நாம் ஆச்சரியம் பாவிக்க,

''அட ஆமாங்க. எல்லாமே லேட் டஸ்ட்தான். எங்க ஸ்பெஷாலிட்டியே என்ன தெரியுமா? மருந்தே தராத மருத்து வர்கள் நாங்கள். மெடிசன்தான் எங்க தொழிலுக்கே மெகா எதிரி. ஆனாலும் யாருக்காவது அடிபட்டாலும் சரி, மேஜர் ஆபரேஷன்னாலும் சரி முதல்ல எங்களைத் தான் தேடுவாங்க சரிதானே'' என்கின்றனர் இந்த எக்ஸர்ஸைஸ் டாக்டர்கள்.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

கல்லூரிச் சாலை

கட்சித் தலைவர்

''லாரி, கார், பேருந்துகளில் எக்ஸ்ட்ராவாக எரிந்து கொண்டிருக்கும் விளக்குகளைக் குறைத்து மின்சாரத்தை மிச்சப்படுத்தினால் மின்வெட்டைத் தடுக்க முடியாதா?''

கருத்தும் படமும்
-எஸ்.ஜே. கலைவாணி

# இது நம்ம தல!



''எதுக்கு பையன் தூங்கும்போது ஸ்கேல் வைக்கறீங்க?''
''அப்பத்தான் அளவா தூங்குவான்!''

குடும்பத் தலைவர்

# அன்றும் இன்றும் என்றும்

டி.கே.சி-க்கு அமரர் கல்கி எழுதிய கடிதம்

21.6.1948

அநேக நமஸ்காரம்.

இன்று காலையில் குறிப்பிட்ட சுபமுகூர்த்தத்தில் ராஜாஜி முடி சூட்டு விழா நடந்தது. எல்லாம் பட்டாபிஷேகம் மாதிரிதான். கிரீடம் மட்டும் இல்லை.

இங்குள்ள அரசாங்க அரண்மனையின் விசாலமும் உன்னதமும் பார்த்தால் ஒழிய நம்ப முடியாது. காந்தி ஆசிரமத்துக் குடிசையிலிருந்து இந்தியாவிலேயே மிகப் பெரிய அரண்மனைக்கு வந்து சேர்ந்த தலைவர், தர்பார் மண்டபத்துச் சிம்மாசனத்துக்கு நடந்து வந்த போது பரம்பரையாக சாம்ராஜ்யம் ஆண்ட சக்ரவர்த்தி நடந்து வருவதுபோலத்தானிருந்தது. அதே சமயத்தில், எந்த நிமிஷத்திலும் இந்த அரண்மனைத் தூசியை உதறிவிட்டு, வெளியேறத் தயாராயுள்ள தபோமுனிவர் வருவது போலவும் இருந்தது.

சந்தர்ப்பத்துக்குத் தகுந்த அற்புதமான பிரசங்கம் ஒன்று செய்தார்கள். எல்லாம் ரேடியோவில் கேட்டிருப்பீர்கள். இன்றைக்கு டிரங்க் டெலிபோன் செய்ய முயன்றதில் கிடைக்கவில்லை. ஆகையால் மகிழ்ச்சியைத் தெரிவிக்க இதை எழுதினேன்.

தாங்களும் ஸ்ரீசதாசிவம், எம்.எஸ்., ராதா முதலியவர்களும் வந்திருந்தால் மிகவும் குதூகலமாயிருந்திருக்கும். (வந்திருந்தவர்கள் எல்லாம் அவ்வளவு குதூகலப்பட்டிருப்பார்கள் என்று சொல்ல முடியாது.) ஒருவேளை மறுபடியும் இந்தியக் குடியரசின் அக்கிராசனராகும் போது * எல்லாரும் வந்து சந்தோஷப்படும் பாக்கியம் கிடைக்கலாம்.

மத்தியானம் ஸ்ரீநரசிம்மன் வந்து தம்பியை அழைத்துப் போயிருந்தான். என்னை ராஜாஜி இரவு 8.30க்கு வரச் சொல்லியிருக்கிறார்.

இங்ஙனம்

ரா. கிருஷ்ணமூர்த்தி



* ராஜாஜி

* இது நடைபெறவில்லை; பாபு ராஜேந்திரபிரசாத்துக்கு பதவியை விட்டுக் கொடுத்துவிட்டு தமிழ்நாடு திரும்பினார் ராஜாஜி.

* * *

**மூதறிஞர் ராஜாஜி நினைவு நாளை (25.12.08) முன்னிட்டு ஒரு ஞாபகப் பதிவு**

# அமரர் கல்கி

நான் ஹைஸ்கூலில் படித்த காலத்தில் 'டைரக்ட் மெத்தட்' என்னும் முறை சிலாக்கிய மாகக் கருதப்பட்டது. அதாவது பாஷையைக் கற்பிக்கும்போது படிக்கச் சொல்லி அதன் பொருளை விளக்கினார்கள். எழுதச் சொல்லி அதிலுள்ள பிழைகளைத் திருத்தினார்கள்.

பாஷையைக் கற்பதற்கு இலக்கணம் அவசியம் இல்லை என்று கருதப்பட்டது. ஹைஸ்கூல் வகுப்புகளில் பிழையின்றிப் பேசவும் எழுதவும் அவசியமான அளவு இலக்கணம் கற்பித்தால் போதும் என்று அந்த நாளில் இருந்தது.

நான் ஹைஸ்கூலில் படித்தபோது நன்னூல் சூத்திரம் ஒன்றுகூடக் கற்றதில்லை.



* டி.கே.சி.

# நன்னூல் படுத்தும் பாடு

இப்போது ஐந்தாவது பாரத்துக்கு ஐம்பத்தாறு நன்னூல் சூத்திரங்கள் பாடமாக வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்றைப் பாருங்கள்:

'அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்கை யாரையும்
உம் ஊம் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை...'

இந்த மாதிரி ஒரு வருஷத்தில் ஐம்பத்தாறு சூத்திரங்கள் ஒரு பதினாறு வயதுக் குழந்தை மனப்பாடம் செய்யவேண்டும். அதற்குப் பொருளும் தெரிந்து கொள்ள வேண்டும்! அவ்வளவையும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்து பரீட்சையில் எழுத வேண்டும்.

இப்படி நான் சொல்வதிலிருந்து, நான் இலக்கணத்துக்குப் பரம விரோதி என்று சில நண்பர்கள் தீர்மானித்துவிடக்கூடும். ஆனால் அது உண்மை அன்று.

மொழி ஆராய்ச்சி மிக அபூர்வமான சுவையுடைய விஷயம். இலக்கணமும் அப்படித்தான். ஆனால் இவையெல்லாம் பாஷையில் தேர்ச்சியடைந்த நிபுணர்களுக்குத்தான் சுவையளிக்கும். கலாசாலையில் படிக்கும் மாணாக்கர்களுக்கு - இலக்கியச் சுவை நன்றாய்க் கண்டவர்களுக்கு - ஓரளவு இலக்கணம் கற்பிக்கலாம். மொழி ஆராய்ச்சியையே முக்கியப் பாடமாக எடுத்துக் கொள்கிறவர்கள் இலக்கணத்தைப் பரிபூரணமாய்க் கற்கவேண்டும். மற்றவர்களுக்ெகல்லாம் மொழியைப் பிழையின்றி எழுதுவதற்கு வேண்டிய இலக்கணம் கற்பித்தால் போதுமல்லவா?

- 'எத்தனை நாள் இந்தக் கொடுமை' கட்டுரையில்...

# தீராத விளையாட்டுப் பிள்ளை

மகாபாரதத்தை இயற்றி முடித்த வியாசர் மிகுந்த மனத்துயரையும் மன அழுத்தத்தையுமே உணர்ந்தாராம்! கதையில் வரும் சோகம் அவர் நெஞ்சையும் கவ்விக்கொண்டதாம். நிம்மதியற்ற ஒரு வெறுமையைத்தான் அவர் கண்டார். அந்த நிலையில் இருந்து மீளவே அவர் ஸ்ரீமகாபாகவதத்தை இயற்றினார் என்று ஒரு கதை உண்டு! பாகவதத்தில் ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தைப் பாடும் பத்தாவது ஸ்கந்தம் (பகுதி) உற்சாகத்தையும் மகிழ்ச்சியையும் நிறைவையும் நிம்மதியையும் தரும் பகுதி. இதைப் பாடி முடித்தபின்தான் வியாசர் மன அழுத்தத்திலிருந்து மீண்டாராம்! கிருஷ்ண லீலையின் மகத்துவம் அப்படி! கிருஷ்ணனுடைய உற்சாகமும் வேகமும் படிப்பவர், கேட்பவர் அத்தனை பேரையும் தொற்றிக் கொள்ளும். பாரத நாட்டின் ஒவ்வொரு வீட்டுக்கும் முதல் பிள்ளை, செல்லப் பிள்ளை கண்ணன்தான். ஒவ்வொரு மனிதன் வாழ்விலும் ஒவ்வொருவிதமான தாக்கத்தை ஏற்படுத்தியவன் அவன். இந்தியப் பண்பாட்டின் ஆக்ஷன் ஹீரோ!

கலைஞர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள், எழுத்தாளர்கள், இசைவாணர்கள் என்று எல்லோரையும் ஒட்டுமொத்தமாகக் கட்டிப் போட்டவன் கண்ணன். கிருஷ்ணாவதார நிகழ்ச்சிகளின் அடிப்படையில் தென்னகக் கலைஞர்கள் உருவாக்கிய கலை வடிவங்கள் சிலவற்றைப் பார்க்கலாமா?

ஆலிலை மேல் பள்ளிகொண்டு, வலதுகாற் பெருவிரலை வாயில் இட்டு சுவைத்துக் கொண்டிருக்கும் பாலகிருஷ்ணனின் வடிவம் கும்பகோணத்து சுற்றுவட்டாரக் கோயில்களில் மிகப் பிரபலம். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் பிரளயத்தின் முடிவில் விழுங்கி தன் உதரத்திலே தாங்கிக்கொண்டு, ஏதுமறியாத குழந்தை போல் பசியில் தன் காற் பெருவிரலையே வாயில் இட்டுச் சுவைத்துக் கொண்டிருக்கும் அப்பாவிப் பிள்ளையாய்க் காட்சி தரும் கள்வன்! ''பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலங்கள் காணீரே! பவழவாயீர் வந்து காணீரே'' என்று பெருமிதப்படும் யசோதைப் பிராட்டியைப் போல, நாமும் நம் கையில் அவனைச் சிறிது நேரம் வைத்துக்கொண்டு சீராட்டி, தாலாட்டி, பாராட்டிவிட்டு பட்டாச்சாரியரிடம் திருப்பிக் கொடுத்து விடலாம்!

வைணவத் தலங்களில் திருவாராதனம் ஏற்கும் இன்னொரு அழகு வடிவம் 'நவநீத கிருஷ்ணன்' வடிவம். 'வெண்ணெய்க்கு ஆடும் பிள்ளை' என்ற தூய தமிழ்ப் பெயரும் இவனுக்கு உண்டு. ஒரு கையில்

வெண்ணெயை உருட்டி வைத்துக்கொண்டு, இன்னொரு கையை வீசி ஆடும் இந்த விஷமக்காரக் கண்ணன் மகிழ்ச்சியின் மறு உருவம்! பார்ப்பவர் மனத்தில் இவன் உற்சாகம் தொற்றிக் கொள்ளும். இதே போல் காளிங்கன் மீது நர்த்தனம் செய்யும் விடலைப் பருவத்து வடிவமும் பிரபலமானது. ஊத்துக்காடு என்னும் தலத்தில் இந்தத் திருவடிவம் மிகப் பிரசித்தி பெற்றது.

இடது திருப்பாதத்தை காளிங்கன் என்கிற ஐந்து தலை நாகத்தின் தலைமேல் ஊன்றி, வலது திருப்பாதத்தை மடித்து உயர்த்தி நடனமாடும் வடிவம். வலது திருக்கரம் அபயம்



டி.கி.நீலகண்டன்

காட்ட, இடதுதிருக்கரம் முறுக்கி வளைந்தெழுந்து முரண்டு பிடிக்கும் காளிங்கனின் வாலைப் பிடித்து முறுக்கும்வண்ணம் அமைந்திருக்கிறது. இந்த அழகிய வடிவில் ஒரு சிறப்பு அம்சம்

என்னவென்றால், பாம்புத் தலை மீது ஊன்றி இருப்பதாகத் தோன்றும் பாதத்துக்கும், பாம்பின் தலைக்கும் இடையில் சிறு இடைவெளி உண்டாம்! அப்படியென்றால் கண்ணனின் திருவுருவத்தின் பாரம் முழுவதும் பாம்பின் வாலைப் பிடித்திருக்கும் இடது கையின் ஊடாகப் பாம்பின் வாலில் இறங்கி விக்ரகத்தின் பீடத்துக்கு வருகிறது. விக்ரகம் முழுவதும் வாலைப் பிடித்த கையின் ஆதாரத்தில் தொங்குகிறது! விக்ரகத்தின் மையப்புள்ளி கச்சிதமாக பீடத்தில் விழுவதால்தான் இப்படி ஒரு அமைப்பு சாத்தியமாயிற்று! ஊத்துக்காடு வெங்கடகவியின் செல்லப் பிள்ளை இந்தக் கண்ணன்! அவரது சங்கீத உருப்படிகளின் நாயகன்!



மாடுகள் மேய்த்து, மாயம் பல புரிந்து கோபியர்கள் நெஞ்சைக் கொள்ளைகொண்ட வடிவம் மன்னார்குடியில் விளங்கும் இராஜகோபாலன். பாலும், தயிரும், வெண்ணெயும், நெய்யும் வசதிக்குத் தின்று வளர்ந்த பிள்ளை அல்லவா! தளதளவென்ற திருமேனியுடன் கால்களில் சிலம்பு கொஞ்ச, கைவளை குலுங்க, அரையில் கட்டிய சலங்கைமணிகள் 'ஜல்ஜல்' என்று இசைக்க பசுக் கூட்டங்களின் நடுவே நிற்கிறான் இந்தக் கோபாலன். வலதுகையில் சாட்டை போன்ற மாடோட்டும் கோல் ஒன்றை ஏந்தியிருக்கிறான். இதற்குச் செண்டு என்று பெயர். நீண்ட மூங்கிற்பிரம்பின் நுனியில் கட்டிய கயிறுடன் இருக்கும் இதனைத் தாங்கியிருப்பதால் இவனுக்குச் 'செண்டலங்காரன்' என்றும் ஒரு பெயர். தன் முதுகில் ஒட்டி உராய்ந்து நிற்கும் ஒரு பசுவின் மீது இடதுகரத்தின் முழங்கையை வைத்து ஊன்றி, அதன் மீது ஆசுவாசமாகச் சாய்ந்தவண்ணம் நிற்கிறான். அவன் அழகில் மயங்கி, அவன் குழலோசைக்குக் கட்டுப்பட்டு நிற்கும் பசுக் கூட்டங்களின் மீது வாஞ்சையுடன் தன் கடைக்கண் பார்வையை வீசி தன் கட்டுப்பாட்டுக்குள்ளும் பாதுகாப்புக்குள்ளும் வைத்துக் காக்கும் கண்ணன் இவன். இந்த உலக உயிர்கள் எல்லாம் அவன் மேற் பார்வைக்குட்பட்ட பசுக்கூட்டங்களே. 'நீ எங்கே மேய்ச்சலுக்குப் போனாலும் திரும்ப என் ஆளுகைக்குள்தானே வர வேணும்' என்று பக்தனின் மீது அளவற்ற நம்பிக்கையும் பாசமும் வைத்துக் கருணை பொழியக் காத்திருக்கும் லோக நாயகன்!

நேர்த்தியான அலங்காரங்களுடன் இராஜகோலத்தில் விளங்கும் இராஜகோபாலனை கட்டாயம் போய்ப் பார்க்க வேண்டும்!

(பெருகும்)

**Galaxy of Carnatic Musicians - எஸ்.வி.கே, அல்லயன்ஸ், சென்னை - 04, விலை. ரூ.150/-**

ஹிந்து நாளிதழ் வாசகர்களுக்கும் சங்கீத ரசிகர்களுக்கும் நன்கு அறிமுகமான எஸ்.வி.கே. எழுதியுள்ள நூல். எளிமையான ஆங்கிலத்தில், மிக சுவாரசியமான கேள்வி - பதில்களாக, படிக்கத் தூண்டும் வகையில் எழுதப்பட்டுள்ளது. நூலில் இடம்பெறும் இசைக் கலைஞர்களின் பேட்டிகள் 'சபாஷ்!' சொல்ல வைக்கின்றன. இசையுலகக் கலைஞர்களை அறிந்துகொள்ள உதவும் இனிப்பான நூல். எஸ்.வி.கேயின் இசை விமர்சனத் திறனுக்கு இதுவொரு சான்று!

**பாரதியும், யுகப் புரட்சியும் - தா.பாண்டியன், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, சென்னை - 600 017, விலை ரூ.40/-**

ரஷ்யாவைப் பற்றி பாரதி எழுதியவற்றின் தொகுப்பு இந்நூல். நோக்கிட்டுக்குப் பயன்பட்ட நூல்கள் பக்கக் குறிப்புகளுடன் இடம் பெற்றுள்ளது ஆய்வு மாணவர்களுக்குப் பயனளிக்கும். ஒரு தமிழ்க் கவிஞனின் உலகளாவிய நோக்கையும் சிந்தனையையும் இந்தத் தலைமுறையினர்க்கு எடுத்துக் காட்டும் முயற்சி.

**யூத் ஜுகல்பந்தி - சாருகேசி, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 02. விலை. ரூ.65/-**

வாய்ப்பாட்டிலும், வாத்திய இசைக் கருவிகளிலும் தேர்ச்சி பெற்றுள்ள இளம் இசைக் கலைஞர்கள் இருபத்தெட்டு பேரின் பேட்டிகள் அடங்கிய நூல். கட்டுரைகளின் தொடக்கத்தில் கலைஞர்களின் இசையுலக 'பயோ-டேட்டா' தரப்பட்டுள்ளது. கேட்பதற்கு இணையான சுவையோடு இருக்கிறது, வாசிக்கக் கிடைத்திருக்கும் இந்த ஜுகல்பந்தி.

- நேயமுகில்










# வாசிக்க ஒரு ஜுகல் பந்தி!



# எமனுக்கு

(விரைப்பாக எருமை வாகனத்திலிருந்து இறங்கிய எமன் சிம்மாசனத்தில் உட்காருகிறார். கம்ப்யூட்டரை பூட் செய்த சித்திரகுப்தன், சகாதேவனின் ஃபைலைத் திரையில் வரவழைக்க கணினிக்கு ஆக்ஞை கொடுத்துவிட்டுப் பேச ஆரம்பிக்கிறார்.)

**சித்திர:** *பிரபோ! கூண்டில் நிற்கும் சகாதேவனின் கணக்கைப் படிக்கிறேன் கேளுங்கள். ஐயோ பாவம்! என்று இவர் மீது கருணை காட்டி விடாதீர்கள்.*

**எமன்:** சித்திர குப்தரே! ஐயோ என்பது எம்முடைய மனைவியின் பெயர். ஆகையால் ஐயோ, பாவம் என்ற இரண்டு சொற்களை நான் ஒருங்கிணைத்துப் பார்க்க மாட்டேன் என்பதை மறந்த உம்முடைய தோலைப் பழத்தோலாகச் சீவி அமிலக் கொப்பரையில்...

**சித்திர:** *(அவசரமாக) கூற்றவனே! மன்னித்து அருள வேண்டும். உளறி விட்டேன். இதோ கேளைப் படிக்கிறேன். காலதேவா! கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தவர் என்று சிலரைப் பற்றி பூலோகத்தில் சொல்வார்கள் அல்லவா? ஆனால், சகாதேவன் என்னும் இந்த அற்ப நரன் பலரைக் கஷ்டப்படுத்தி முன்னுக்கு வந்தவன் என்பதைக் கணினி சொல்லுகிறது. பிரபோ! இவன் பிறருக்கு அளித்த இம்சைகள் கருவிலிருந்து தொடங்குகின்றன. எளிதாக அன்னையின் வயிற்றிலிருந்து வெளிவர வேண்டிய இந்த நரன் உள்ளே அடித்த குட்டிக் கரணங்களால் கொடி சுற்றிப் போனதால், அன்னையின் வயிற்றைப் பூசணியாகக் கீறி வெளிக்கொண்டு வர வேண்டியதாயிற்று.*

ஜே.எஸ்.ராகவன்

**எமன்:** ஆகவே இவனைக் கொடியவன் என்கிறீர் அல்லவா? சித்திரகுப்தரே! இந்த நரன் பிறருக்கு இழைத்த கஷ்டங்களின் பட்டியலிலிருந்து சில ஹைலைட்டுகளை மாத்திரம் சொல்லும்.

**சித்திர:** உத்திரவு பிரபோ. எஸ்.எஸ்.எல்.சி பரீட்சையில் ஈ, கொசு மற்றும் ஈசல் அடிச்சான் காப்பி அடித்த இவன் பிடிபட்டபோது, தன்னைப் பார்த்துத் தான் அடுத்த சீட் ரமணி எழுதினான் என்று சாதித்து, ரமணியை மூன்று வருஷம் டிபார் செய்ய வைத்தான். எக்ஸ்பர்ட் ஒபினியனுக்காகச் சேர்த்துக்கொண்ட நண்ப

# எமன்!



னுடன் பெண் பார்க்கப் போனவன், கிளி மாதிரியிருந்த பெண்ணைப் பார்த்துவிட்டு, தன் நண்பனைப் பற்றி மொட்டைக் கடிதம் எழுதிப் போட்டு, பின்னர் அந்தக் கிளியைக் கொத்திக்கொண்டு போனான். ஆஃபீஸில் கையூட்டாகக் கொடுத்து அனுப்பிய கொழுத்த தொகையைக் கொண்டு போனபோது, அந்த அதிகாரி மாரடைப்பால் திடீர் மரணமடைந்திருந்த சூழ்நிலையை உபயோகித்து, அட்டாக் வருவதற்கு முன்னே பெட்டியைக் கொடுத்துவிட்டேன் என்று முதலாளியிடம் கதைத்துப் பணத்தைப் பத்தமடைப் பாயாகச் சுருட்டிவிட்டான். அது மட்டுமா...

**எமன்:** நிறுத்தும். இவனைப் பதம் பார்க்கப் பல பருக்கைகளை நம் முன் வைத்துள்ளீர்கள். கருட புராண தண்டனை சட்டத்தின் கீழ் எப்படி இவனைக் காய்ச்சி எடுக்கலாம் என்று பார்த்துச் சொல்லும்... ஒரு நிமிடம்! சித்திரகுப்தரே... இவன் கடைசி காலத்தில் செய்த சில புண்ணிய காரியங்களைச் சொல்ல மறந்துவிட்டீர்களே. என்னுடைய இணைப்பு டெர்மினலில் தெரிகின்றனவே. தவற விட்ட உம் கண்களைப் பனை நுங்குகளாகப் பெயர்த்து...

**சித்திர:** பிரபோ! நான் சொல்ல வருவதற்குள் அவசரப்பட்டு விட்டீர்கள். இவன் நம் உலகுக்கு வந்தும் தன்னுடைய வாலைப் பலமாக ஆட்டியுள்ளான் பிரபோ.

**எமன்:** ஆ? அப்படியா? எப்படி?

**சித்திர:** நம்முடைய எமலோக கம்ப்யூட்டர் புரோக்ராமுக்குள் புகுந்து வேறொருவர் ஃபைலில் சில பக்கங்களை 'கட் செய்து தன்னுடைய ஃபைலுடன் பேஸ்ட்' செய்துவிட்டான் பிரபோ.

**எமன்:** அப்படியா? சித்திரகுப்தா! எமனையே ஏமாற்றிய இந்த நரனை, இங்கு வந்து கம்ப்யூட்டர் வாசனையே அறிந்திராத எழுபது வயதுக்கு மேற்பட்ட வயோதிகர்களுக்கு ஜாவா, லோடஸ், டாட் நெட் சொல்லித் தர வேண்டும் என்றும், அதில் ஒரு பைட் அளவுகூட வெற்றி பெறாவிட்டால் இவன் உடலில் கோடிக்கணக்கான வைரஸ்களைச் செலுத்தி டார்ச்சர் செய்யவேண்டும் என்று விசேஷ உத்தரவிடுகிறேன். ○

இரண்டு நாட்களுக்கு முன்னர் நடந்து முடிந்திருந்த மாமாவின் சபா கச்சேரி குறித்துப் பேசலாமென்ற ஆர்வத்துடன், அவரைப் பார்க்க திருவான்மியூருக்குப் போனேன். கூடத்து இருக்கையில் மாமி ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் ஒன்றியிருந்தது கிராதிக்கதவு வழியாகத் தெரிந்தது. முகம் கொஞ்சம் வாட்டமுற்றுத்தான் இருந்தது. என்ன யோசனையாக இருக்கும்? மாமிக்கு எதிர்பாராதவிதமாய் கருப்பை தொடர்பான பிரச்னை ஏற்பட்டு, கொஞ்ச நாட்களாக அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார்.

மாமா சஞ்சிகை ஒன்றைக் கையில் விரித்து வாசித்தபடி அறைக்குள் உட்கார்ந்திருந்ததை, கூடத்திலிருந்தே பார்க்க முடிந்தது. அரவம் கேட்டதும், ''டேய் இங்க வாடா மொதல்ல. இதப்படி'' என்று கையில் இருந்த பிரபல வாராந்திரியில் டிசம்பர் இசைவிழாக் கச்சேரிகளில் தனது கச்சேரியையும் விமர்சித்து எழுதியிருப்பதை விரலால் சுட்டிக்காட்டி நீட்டினார். ''உயிரே இல்லாம எப்படி எழுதியிருக்காம்பாரேன்... ப்ச், ஒரே சலிப்பா இருக்குடா. 'பாவாடை உடுத்தி, கண்மையிட்டு, நெற்றிப் பொட்டிட்டு, சுட்டி வைத்து எல்லா அலங்கார விவரணத்தைத் தாண்டி ஒரு ராக ஆலாபனை கொடுக்கும் அனுபவமே நம் விமர்சகர்களுக்கும் நிருபர்களுக்கும் கிடைக்காதோ?'' என்று சலித்துக்கொண்டார் மாமா.



''ஏன் மாமா? புதுசா ஏதும் அனுபவம் கெடைக்கமேகூட அதப்பத்தி ஏதும் எழுதத் தெரியல்லயோ என்னவோ?'' என்றபடியே கையில் எடுத்துப் படித்துப் பார்த்தேன். உண்மையில் விமர்சனம் மிகவும் சப்பென்றுதான் இருந்தது. மாமா விடம் தொடர்ந்து பேசமுடியாமல், முகாரி பாடவேண்டிய இடத்தில் கதனகுதூகலம் பாடக் கேட்டது போல லேசாக நெளிந்தேன். அவர் முகத்தைப் பார்த்தும் பாராமலும், ''சரி, விடுங்கோ மாமா. இப்போ இதுவா முக்கியம்? யாரு என்ன பாடினா, எப்படி பாடினான்றதுதானே...''

''டேய், நீ பேச்சை மாத்தாதே. புத்தகத்தையே படிக்காம புக் ரிவ்யூ எழுதறதுக்கும், இந்த மாதிரி பழைய க்ளீஷேட் வேர்ட்லை வெச்சிண்டே சும்மாவானும்

# ஜெயந்தி சங்கர்

மாடா? அது ரசனையிலயும் இல்ல; எழுத்துலயும் இல்ல. சிரத்தையுமில்ல. ப்ச்...''

''ஓரளவுக்கு மேலான சிரத்தையையெல்லாம் எதிர்பார்த்தா குருகுலமுறைக்குத்தான் போகணும்.''

''டேய்... நான் எதிர்பார்க்கறது விமர்சனம் எழுதறவாளோட கொறஞ்சபட்ச சிரத்தையைத்தான்.''

பேச்சை மாற்றும் நோக்கில், ''பாழாப்போற இந்த 'ஆடிட்டிங்' போன வாரமே முடிஞ்சிருக்க வேண்டியது. முடிஞ்சிருந்தா கச்சேரிக்கு வந்திருக்கலாம். முதல் வரிசைல உட்கார்ந்திருந்த ஆனானப்பட்ட விக்கு அண்ணாவே மேடையேறி

# புதிய அவகாரம்

சமாளிச்சு ஒட்டறதுக்கும் என்ன பெரிய வித்தியாசம்ங்கறேன்'' என்று அவர் ஒரு போடு போட்டதும், பதில் சொல்ல முடியாமல் விழித்தேன்.

''இல்ல மாமா. இவாள்ளாம் நெஜமாவே கச்சேரி கேட்டுட்டுத்தான் மாமா எழுதறா...''

''சரிடா. அப்படியே இருக்கட்டும். தனக்கேற்பட்ட அனுபவத்தை எழுதற கொறஞ்சபட்ச நேர்மையாவது வேண்டாமா சொல்லு. ம்? ஹால்ல கச்சேரி கேக்கும்போதே பழைய க்ளீஷேட் வார்த்தைகள் மேல நாம பாடற ஆலாபனையைப் பொருத்திண்டுடறாளோ இவா? இல்ல எழுதும்போது பழைய ரிவ்யூஸையெல்லாம் எடுத்து வெச்சிண்டு எழுதுவாளோ? ஒரு ஒரிஜினாலிடி வேணா

வந்து உங்க கையை அழுத்தி 'பல்லவி ரொம்ப நன்னாப் பாடினேள்'னு சொல்லிட்டுப் போனாராமே. நெரவல், ஸ்வரம் பாடினபோது தாளக்கணக்கையெல்லாம் உன்னிப்பா கவனிச்சு ரசிச்சாராமே. இப்பத்தான் மாமி சொன்னா. அதைவிடவா ஒரு பாராட்டு வேணும் உங்களுக்கு?'' என்றதும் முகம் இலேசாக பிரகாசமடைந்தாற்போலிருந்தது.

''சரிடா. சந்தோஷம். ஆனா, அவரா வந்து ரிவ்யூ எழுதப்போறார்? பாராட்டுன்றது வேறடா. ரிவ்யூன்றது தனி. வாசகனோட ரசனையை வளர்க்கக்கூடிய விமர்சனத்தை எழுதறவா ஒழுங்கா எழுத வேண்டாமான்றதுதான் இப்ப என்னோட ஆர்க்யூமெண்ட்.'' மாமா விடாமல் ஒரே ஸ்வரத்தில் நின்றார்.




ஐந்து நிமிடங்களில், ''மறுபடியும் சாயந்திரம் வர்றேன். மாமிகிட்ட சொல்லிடுங்கோ'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டேன்.

**வ**ருடா வருடம் புது உருப்படிகளைப் பாடம் பண்ணவென்று அவர் எடுத்துக் கொள்ளும் பிரயத்தனங்கள் கவனிப்போரை மிரளவைக்கும்.

வளைந்து கொடுக்கத் தயாராக இல்லாததுதான் அவர் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாக இருந்ததோ என்று பல முறை எண்ணியதுண்டு. மாமா கொஞ்சம் இறுக்கத்தைத் தளர்த்திக்கொள்ள முயற்சித்திருக்கலாம்.

**இ**ரண்டு வருடம் முன்புதான், இசைத் துறையில் முழுக்கவனம் செலுத்தவென்று பெரிய தனியார் நிறுவனத்தில் பார்த்து வந்த கணக்கர் உத்தியோகத்தை விட்டுவிட்டு விருப்ப ஓய்வு பெற்றார். ஜானு பத்தாம் வகுப்புதான் படித்துக்கொண்டிருந்தாள். பத்ரிக்குப் படிப்பு முடிந்துவிட்டது என்ற தைரியம் மாமாவுக்கு. ஆனால், மகன் பத்ரிக்கு கல்லூரிப் படிப்பை முடித்து இரண்டரை வருடமாகியும், வேலை அமையவேயில்லை. அரைக்கால், காலே அரைக்கால் என்றெல்லாம் லயக் கணக்கில் புலியான மாமாவுக்கு, வாழ்க்கைக் கணக்கு மட்டும் தப்பித்தான் போனது.

அவர் நினைத்தது ஒன்று; நடந்ததோ வேறொன்று. குடும்ப வருவாய் அவரோகணமாகக் குறைந்து, தேவைகள் கூடி, கூட்டமாகத் துரிதநடையில் தனியாவர்த்தனம் செய்ததில் குடும்பம் மிகவும் தவித்தது.

ஏற்கெனவே வேலையில் இருந்தபோது, அவ்வப்போது கிடைத்த தனி ஆல்பம்களுக்குப் பின்னணியில் வீணையிசைப்பது போன்ற சின்னச் சின்ன வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டு வந்திருந்தார். ஆனால், அவற்றின் மூலம் கிடைத்தவை எல்லாமே சிறு தொகைகள்தான். சிலர் நாட்டியத்துக்கு வீணை வாசிக்கக் கூப்பிட்டார்கள். நாட்டியத்துக்குப் பாடினால் அதிகமாகப் பணம் கிடைக்கும் என்று பலர் ஆசைகாட்டிக் கூப்பிட்டும், குரல் வீணாகிப் போகுமென்று பயந்து மாமா ஒப்புக் கொள்ளவேயில்லை.

மாமி பிறந்த வீட்டில் கிடைத்த உதவி ஓரளவு கைகொடுத்தும் நகைகள் எல்லாம் ஒவ்வொன்றாகக் கரைந்து மறைந்தன. 'ஜிங்கிள்ஸ் பாடக் கூப்பிட்டதுக்கும் ட்ராக் பாடக் கூப்பிட்டதுக்கும் போக மாட்டேன்னுட்டார்டா' என்று மாமி மிகவும் வருத்தத்துடனும் இலேசான கோபமாகவும் என்னிடம் அவ்வப்போது புலம்பினாள். இதையெல்லாம் சில நேரங்களில் மாமாவின் காதுகளுக்கென்றே மாமி சொல்லும்போது, 'டேய் கிச்சா கேட்டியா, அம்மி கொத்த சிற்பி வேணுமான்டா?' என்று கிண்டலடிப்பார்.

மாணவர்களுக்கு சரளி ஜண்டையிலிருந்தே அகார சாதகம் துவங்கி விடுவார். வேறு ஆசிரியரிடம் ஏற்கெனவே ஓரளவுக்குப் பாடமாகியிருந்தாலும் மீண்டும் சரளியிலிருந்து பிள்ளையார் சுழி போடுவார். தன்னிடம் வீணை கற்றுக்கொள்ள வேண்டுமானால் கொஞ்ச காலத்துக்கேனும் வாய்ப்பாட்டும் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிபந்தனை வேறு. இசை பயில வருவோரின் எண்ணிக்கை சடசடவென்று குறையக் கேட்பானேன். அதிலும் நவீன உலகச் சிறார்களிடம் அந்தக் கெடுபிடியெல்லாம் உதவுமா? கிடைத்த ஃபீஸும், மாமி சொல்வது போல, வீணைகளுக்கு அவ்வப்போது தந்தி மாற்றவும் மெட்டு மாற்றவுமே காணாது.

**ஒ**ரு வாரத்துக்குப் பிறகு, மாமா அமைதியான ஓர் இரவில் என்னை அழைத்திருந்தார். மாமிக்கு கருப்பையை அகற்ற வேண்டுமென்றும் அறுவைச் சிகிச்சையை சீக்கிரம் செய்ய வேண்டும் என்றும் சொல்லி விட்டிருந்தார் மருத்துவர். ''டேய் கிச்சா, நீ நாளைக்கு மறக்காம வாடா. ஒண்ணுமில்ல, ஜஸ்ட் லைக் தட். கொஞ்சம் பேசணும்'' என்ற மாமாவின் குரலில், என்ன விஷயமென்று ஒரு அறிகுறியும் கிடைக்கவில்லை. கேட்டாலும் சொல்லும் உத்தேசத்தில் அவர் இல்லை என்று புரிந்தது.

மறுநாள் காலையில் மாமா வீட்டுக்குள் நுழைந்தேன்.

'இதோ வந்துடறோம்' என்று மாமியிடம் சொல்லிவிட்டு, உடனே என்னோடு கிளம்பினார். வீதியில் இறங்கி மாமிக்கு முன்னால் பேசவேண்டாமென்று நினைத்ததைச் சொல்லிவிட்டு, ''ராத்திரியெல்லாம் யோசிச்சேன்டா. ஸ்திரமான வருமானம் வேணும், சம்பாதிக்கணும்டா. எல்.ஐ.ஸி. ஏஜெண்டாப் போகலாம். ஆனால், அலையணுமே. நாலு பேர்கிட்ட பல்லைக் காட்டிண்டு நிக்கணும். அதுக்கு இந்த அக்கௌண்டன்ட் வேலையே பெட்டர்னு தோணிடுத்து. வேற வழியில்ல போலயிருக்கு. வருமானமில்லாட்டா பாவம், அவளும் என்னதான் செய்வா? ஆபரேஷன் செலவு மட்டுமா, இன்னும் ஒரு வருஷத்துல ஜானுவை காலேஜ்ல சேர்த்தாகணும்.

அத்தோடு போச்சா, அப்புறமும் கல்யாணம் அது இதுன்னு இருக்கே. ரெண்டு வீணையை மட்டும் வச்சிண்டு மத்த ரெண்டையும் வித்துடப் போறேன். கொஞ்சம் பணமும் கெடைக்கும். கச்சேரிகளையெல்லாம் சுத்தமாவே நிறுத்திடறதா இருக்கேன்டா. இருபது வருஷத்துக்கு முன்னாடியே நான் மியூஸிக்ல முழுக்க எறங்கியிருக்கணும்டா. நான் நெனச்சாப்பல இந்த இரண்டு வருஷத்துல பெரிசா ஒண்ணும் என் கேரியர் பிக்கப் ஆகலை'' என்று பேசிக்கொண்டே கடற்கரையின் திசையில் நடந்தவரோடு நடந்தேன்.

''அதுக்குன்னு கம்ப்ளீட்டா நிறுத்தணுமா மாமா?'' என்று சட்டென்று சற்று உரக்கவே கேட்டுவிட்டேன்.

**''பசிக்கிறவனுக்கு புசிக்க வழியில்ல, புசிக்க வழியுள்ளவனுக்கு பசியில்ல...''**

**''நான் கேட்டது, 'பஞ்ச் டயலாக்', 'பஞ்ச டயலாக்' இல்ல...!''**

**- மதுரை பால.கோவிந்தராஜ்.**

## துக்கடா... பக்கோடா

**ரஞ்சனி காயத்ரியின் Blog ல் காணடா அந்தக் கனடாவை...**

"இது செப்டெம்பர் மாதம் நடந்த சுவாரஸ்யமான ஒரு நிகழ்ச்சி. ஒரு இசை டூருக்கென நாங்கள் கனடா போயிருந்த சமயம் அங்கே அவர்களுக்குத் தேர்தல் நேரம். ஆனால் அங்கே துளிக்கூட தேர்தலுக்கான பரபரப்பு இல்லாததைக் கண்டு ரொம்பவே ஆச்சரியப்பட்டுப் போனோம். இதில் ஹைலைட்டிங்கான விஷயம் என்னவென்றால், நாங்கள் Montreal பகுதியில் சென்று கொண்டிருக்கும் போது அங்கங்கே ஒட்டப்பட்டிருந்த போஸ்டர்களைப் பார்த்துத்தான் தேர்தல் வேட்பாளர் யார் என்பதை அறிந்துகொண்டோம். சரியாக எங்கள் கார் ட்ராஃபிக் சிக்னலில் நின்று கொண்டிருந்தபோது, ஒரு தேர்தல் வேட்பாளரே எங்கள் காரை நோக்கி வந்து ஒரு சிறிய ஃபாம்ப்லெட்டைக் கொடுத்துவிட்டுச் சென்றதை என்னவென்று சொல்வது" என வியந்துள்ளனர் ரஞ்சனி மற்றும் காயத்ரி.

– குமார்



"நீ ஏண்டா பதர்றே. நிறுத்தாம என்ன செய்யச் சொல்றே? போட்டி ரொம்ப ஜாஸ்தியாயிருக்கு. காம்ப்ரமைஸுக்கு நான் தயாரா இல்லே. அப்புறம் எப்படி? ப்ச், விடு."

"இல்ல, கொஞ்சம் கொறச்சுண்டா போறாதான்னுதான்..."

"கச்சேரின்னா லேசா? நெறைய டைம் வேணும்டா. பின்ன எதுக்கு நான் வேலையை விட்டேன்னு நெனைக்கற? கச்சேரிகள் கேட்டு விமர்சனம் எழுதலாமான்னு நெனைக்கறேன். முக்கியமா ரிவ்யூ எழுதற ட்ரெண்டை மாத்தறதுதான் என்னோட முதல் வேலை. நெறைய கச்சேரிகள் கேக்கப் போகணும். அதுக்கும் நேரம் வேணும்தான். ப்ச். பார்க்கலாமே. ம், முடிஞ்சவரைக்கும் போய்க் கேட்டு எழுதுவோமே. பத்திரிகைக்காராளாவது ஏதாவது சில்லறை தராளான்னு பாக்கறத. எல்லாமே இந்தச் சில்லறைலதான் அடங்கிடறது பார்த்தியா, ம்?" என்று வளவளவென்று விடாமல் பேசிய மாமாவின் தொண்டை திணறியது போலிருந்தது என்றாலும், நிறுத்தாமல் பேசினார்.

"நீ ஏண்டா ஃபீல் பண்றே? ஏற்கெனவே நீ பல தடவை கைகொடுத்திருக்கியேடா. ஒண்ணு கவனிச்சியா? சின்ன வயசுல சங்கீதத்துக்கிட்ட நான் போகப் போக எல்லோரும் என்னை பாடி பாடின்னு தொரத்தினா, இன்னிக்கு சங்கீதம் கைகூடினப்புறம் இதோ நானே அதை விட்டு விலகி ஓட வேண்டியதாயிருக்கே. வெரி ஸ்ட்ரேஞ்ச்! என்னத்தைச் சொல்ல? ப்ச், என்னவோ போ" என்றபடி மீண்டும் வீட்டுக்குத் திரும்பும் உத்தேசத்தில் அப்படியே திரும்பி நடந்தவர்,

"ஒரு நல்ல க்ரிட்டிக் உருவாகப் போறான்னு திருப்திப்பட்டுக்கலாமே, ம்? என்ன சொல்றே?" - பகபகவென்று சிரித்தார்.

"பட் மாமா..."

"நீ எந்தக் காலத்துலயும் வேலையை மட்டும் விட்டுடாதடா கிச்சா. உன்னோட வேலைக்கு சங்கீதத்த ஒரு பக்கவாத்தியமா மட்டும் வெச்சுக்கோ. 'கண்ணெதிரே உங்களைப் பார்த்தப்புறமும் அப்படியெல்லாம் செய்ய நான் என்ன முட்டாளா'னு கேக்கறியோ? ம், அதுவுஞ்சரிதான்" என்றபடி இறுக்கத்தைத் தளர்த்த நினைத்து கடகடவென்று மீண்டும் சிரித்தார் மாமா. நானும் உடன் சிரிக்க முயற்சித்தேன். ●

# சினி சிப்ஸ்



● சமீபத்தில் நடிகை குஷ்பூ பாடகியாக பிரமோஷன் ஆனது தெரியும். இப்போ டபுள் பிரமோஷன்... எழுத்தாளராக அவதாரம் எடுத்து 'ருத்ரா' தொடரை எழுதி வரும் குஷ்பூ, சின்னத்திரை தயாரிப்பாளராகியுள்ளார். குஷ்பூ எழுதிய கதையை, ராபர்ட் ராஜசேகர் இயக்க, முதன் முறையாக சோனியா அகர்வால் சின்னத் திரையில் நடிக்க, 'நாணல்' தொடர் தயாராகிறது. (நடிகை, பாடகி, எழுத்தாளர், தயாரிப்பாளர்... நான்முக குஷ்பூ)

● 'கோலிவுட்டில் புதுமுகமாக நுழைய நான் பட்ட வலியையும், அவமானத்தையும் நினைத்துப் பார்த்தே... 'சோ த பீப்புள்' என்ற சினிமா கம்பெனியைத் துவக்கினேன் என்கிறார் நடிகர் ஆர்யா. இந்தத் தயாரிப்பு நிறுவனம் புதுமுக இயக்குநர் 'கஹா'வுக்கு முதல் படத்தை இயக்க வாய்ப்பு வழங்கி வாழ்க்கையில் விளக்கேற்றி உள்ளது. அசிஸ்டெண்டுகள் ஆர்யா நோக்கி படையெடுக்கிறார்களாம்.

● இதுவரை 54 படங்களை இயக்கியிருந்தாலும் மூன்று படத்துக்கு மட்டுமே பாரதிராஜா கதை எழுதியுள்ளார். நான்காவதாக 'பொம்மலாட்டம்'. இதில் பாரதிராஜாவின் கதை உயிர் என்றால், வசனத்தால் உடல் கொடுத்தது அழகம் பெருமாள்.

● அந்தோணி யார்? படம் தெலுங்கு, கன்னடம், மலையாளம் மும்மொழியிலும் தயாராகிறது. மூன்று ஹீரோ வேஷம் கட்டி தான் யார் தெரியுமாவென நிரூபிக்கிறாராம் நடிகர் ஷ்யாம்.

- சூர்யபாரதி




தேவதை? **மேதோ நிஷ்டா** - கொழுப்பு என்கிற தாதுவுக்கு அதி தேவதை. மேதஸ் என்றால் கொழுப்பு. மேதஸ் சற்று அதிக மாக இருந்தால் வரக்கூடிய குணம் கர்வம் என்பதால், இவளுக்கு உரிய குணமும் அதிக கர்வம் என்பதாக அமைந்திருக்கிறது.

அதி கர்விதா என்பதால் விரும்பத்தகாத அகந்தை படைத்தவள் என்று எண்ண லாகாது. இங்கே கர்வம் என்பது காம்பீர்யத் தைக் குறிக்கும்; யாருக்கும் பணியாத உன்னத உயரத்தைக் குறிக்கும்.

**மது ப்ரீதா** - தேன் போன்ற குணம் கொண்டவள். தேன் மீது ப்ரீதி கொண்டவ ளாகவும் திகழ்பவள்.

இவளுக்குப் பிடித்த அன்னம் - தயிர் அன்னம் - **தத்யான ஸக்த ஹ்ருதயா.**

# அனைத்து வர்ணங்களின்

**ஸ்**வாதிஷ்டான சக்கரத்தில் உள்ள அம்பாள் கையில் என்ன ஆயுதம் ஏந்தி யிருக்கிறாள்? **சூலாயுதஸம்பன்னா** - சூலினியாக, சூலத்தை ஏந்தியிருக் கிறாள்.

**பீத வர்ணா** - மஞ்சள் நிறத்தவள்.

**அதி கர்விதா** - இவளுடைய குணம் என்ன? மூன்று குணங்களை இதுவரை பார்த்தோம் - அச்சம் ஏற்படுத்திக் களைதல் - பயபக்தி; அடுத்து உபாஸகர்களுக்கு வரம் அருளல், அதன் பின் அனைவருக்கும் வரம் தருதல். இப்போது நான்காவதாக வரும் குணம் - அதி கர்வம். சற்று கூடுத லான கர்வம் படைத்தவள். இதன் பொருள் என்ன என்பதை அப்புறம் பார்ப்போம்.

இவள் உடலின் எந்த தாதுவுக்கு அதி

இவள் எந்த தேவதைகளால் சூழப்பட் டிருக்கிறாள்? **பந்தின்யாதிஸமன்விதா** என்று பந்தினியில் தொடங்கி, ஆறு தேவதைகளால் சூழப்பட்டிருக்கிறாள். 'ப' வர்க்கத்தில் இரண்டு அக்ஷரங்கள், ம, ய, ர, ல என ஆறு அக்ஷரங்களுக்குரிய ஆறு தேவதைகள் சூழ, ஆறு தள தாமரையில் வீற்றிருக்கிறாள் அம்பிகை, ஸ்வாதிஷ்டான சக்கரத்தில்.

**இ**தற்கப்புறம் வருவது மூலாதார சக்கரம். இது முக்கியமானது.

மூலாதாரத்தில் இருக்கக்கூடிய அம்பாள் என்ன மாதிரியான ஸ்வரூபிணி? அதைச் சொல்பவைதான் அடுத்து வரும் திருநாமங்கள்.


* ஸ்ரீ ராகிணி தேவி

# அணிகலன்!

மூலாதாரத்தில் இருக்கக்கூடியவள் **பஞ்சவக்த்ரா** - ஐந்து முகங்களைக் கொண்டவள்.

**அஸ்திஸம்ஸ்திதா** - கொழுப்பையெல்லாம் தாண்டி, உள்ளே போனால், எலும்பு. எலும்புக்கு தேவதையாக இருக்கக்கூடியவள். இவள் கையில் எதைத் தாங்கியிருக்கிறாள்? **அங்குசாதிப்ரஹரணா**. அங்குசத்தைத் தாங்கிக் கொண்டிருக்கக்கூடியவள். ஏதாவது தப்பு பண்ணினால் இலேசாகக் குத்துவதற்கான ஆயுதம் அங்குசம்!

**வரதாதிநிசேவிதா** - அவள் வரதாவில் ஆரம்பித்து வரக்கூடிய தேவதைகளால் ஸேவிக்கப்படுகிறவள். ய,ர,ல முடிந்து போய் அடுத்து வருவது 'வ' என்ற எழுத்து. அதனால் **'வ'ரதாதி நிசேவிதா**. வ, ஶ, ஷ, ஸ ஆகிய வடமொழி எழுத்துக்களைக் குறிக்கும் நான்கு தள தாமரையில் வீற்றிருக்கிறாள். அப்படி வீற்றிருப்பவளுக்கு என்ன திருநாமம்?

**ஸாகின்யம்பாஸ்வரூபிணி** - அவளது திருநாமம் ஸாகினி.

பிடித்த உணவு எது? சிறு பயறு இருக்கிறதே. அதுதான் அவளுக்கு ரொம்பப் பிடித்த உணவு. **முத்கௌதனஸக்த சித்தா** - முத்கௌ என்பது சிறு பயறு. அதைக் கொண்டு தயாரிக்கப்படும் அன்னம் அவளுக்குப் ப்ரீதியானது.

## ஆக்ஞா சக்கரம்

மூலாதாரம் வரை இப்போது வந்தாகி விட்டது - விசுக்தியில் ஆரம்பித்து மூலாதாரம் வரை.

ஐந்து முகங்களுடைய தேவதையாக


* ஸ்ரீ லாகினி தேவி

அவள் மூலாதாரத்தில் அருள்பாலிக்கிறாள். அடுத்து எடுத்துக்கொள்ளும் திருநாமம் **ஷடானனா.** இவள் ஆக்ஞா சக்கரத்து தேவதை. ஷடானனா என்றால் ஆறு முகங்கள் கொண்டவள். இவள் **மஜ்ஜா ஸம்ஸ்தா** - எலும்புக்கும் உள்ளே இருக்கக்கூடிய திசுதான் மஜ்ஜா. Bone marrow என்று ஆங்கிலத்தில் சொல்வதை நாம் மஜ்ஜை என்று அழைக்கிறோம்.



* ஸ்ரீ ஸ்வாதிஷ்டானா தேவி

அவளுக்கு ஹாகினி என்று பெயர்.

**டா**கினி, ராகிணி, லாகினி என்ற பெயர்களைப் பார்த்தோம். இந்த ஆதார சக்கர தேவதைகள் வடிவத்தில் அம்பாளை வழிபடுவதை **டரல** யோகம் என்பார்கள். டாகினி, ராகிணி, லாகினி என்ற பெயர்களின் முதல் எழுத்துக்களைக் கொண்டு உருவான ரகசியச் சொல் தான் **டரல** யோகம் என்பது.

**ஹம்ஸவதி முக்யசக்தி ஸமன்விதா** - ஷடானனாவாக ஆறு திருமுகங்களுடன் அம்பிகை உறைகின்ற ஆக்ஞா சக்கரத்தில், இரண்டு தளங்களுடைய தாமரைதான். இந்த இரு தளங்களுக்கும் உரிய அக்ஷர தேவதைகள் ஹம்ஸவதி, க்ஷமாவதி. ஹ, க்ஷ என்ற அக்ஷரங்களைக் குறிப்பவர்கள் இவர்கள். நாம் செய்யக்கூடிய நன்மைகளையெல்லாம் எடுத்துக்கொள்ளக்கூடியவள் ஹம்ஸவதி. செய்திருக்கக்கூடிய தவறுகளைக் கண்டு அதற்கு மன்னிப்பும் அருள்பவள் க்ஷமாவதி. இந்த ஹம்ஸவதியும் க்ஷமாவதியும் புடைசூழ, **முக்கிய சக்தி ஸமன்விதா**வாகத் திகழ்கிறாள் அம்பிகை, ஆக்ஞா சக்கரத்தில்.

**ஹரித்ரான்னைக ரஸிகா** - இவள் மஞ்சள் நிற அன்னத்தை ரசித்து ஏற்கக்கூடியவள்.

**ஹாகினி ரூபதாரிணி**



* ஸ்ரீ லாகினி தேவி

அம்பாளை ஆதார சக்கரங்களில் குண்டலினி சக்தியாக நிலைநிறுத்தி ஆராதிக்கும் முறைக்கு டரல யோகம் என்று பெயர் - மூலாதாரத்திலேயிருந்து ஆக்ஞா சக்கரம் வரை குண்டலினியை எழுப்பி நிறுத்தி, அதன் பிறகு சஹஸ்ரார கமலத்துக்குப் போவது.

## ஸஹஸ்ரார கமலம்

**ஆ**க்ஞா சக்கரத்துக்கு அடுத்து வருவது சஹஸ்ராரம்தான். **சஹஸ்ர தள பத்மஸ்தா.** அம்பிகையின் ஒவ்வொரு ரூபமாக முடிந்து போய் டாகினி, ராகிணி, லாகினி, காகினி, ஹாகினி எல்லாம் முடிந்து, அவை எல்லாம் சேர்ந்து, அவற்றையும் கடந்து சஹஸ்ரார கமலத்தில் அவள் பிரகாசிக்கிறாள். இந்த நிலைதான் சஹஸ்ர தள பத்மம் என்கிற ஆயிர

தள தாமரை (அல்லது ஸஹஸ்ரார கமலம்). இது எண்ணிக்கையில் வெறும் ஆயிரம் என்று அர்த்தம் இல்லை. எண்ணற்ற என்ற பொருளில் வருகிற சொல். இப்படி, எண்ணிக்கையைக் கடந்த நிலையில், **ஸர்வ வர்ணோப ஷோபிதா**வாக அனைத்து வர்ணங்களையும் தாண்டி பிரகாசிக்கிறாள் அம்பிகை. அதே சமயம், அனைத்து வர்ணங்களையும் தனக்குள் கொண்டவளாகவும் இருக்கிறாள்.



✱ ஸ்ரீ ஹாகினி தேவி

ஆசார்யர் ஆதிசங்கரர் பாடியிருக்கிறார். சிந்தாமணியின் குணம் படைத்தவள் அம்பிகை என்கிறபோது, இரண்டு விதமாகப் பொருள் கொள்ளலாம்.

சிந்தாமணி என்பது, நாம் கேட்டதை எல்லாம் கொடுக்கும். கேட்காமலேயும் கொடுக்கும். அம்பாள், நாம் கேட்காமலே வாரி வழங்கக்கூடியவள். சிந்தாமணிக்கு இன்னொரு குணமும் உண்டு. நவரத்தினம் என்று நாம் சொல்கிறபோது, அந்தந்த ரத்தினத்துக்கும் உரியதான ஒரு நிறம் இருக்கிறது. அதனதனுடைய நிறத்தைப் பொறுத்துத்தான் நவரத்தினங்களின் குண அம்சங்களும் அமைகின்றன. செம்பு - மாணிக்கம் என்பது சிவப்பாகத்தான் இருக்கும். மரகதம் என்பது பச்சையாகத்தான் இருக்கும். ஆனால், சிந்தாமணி கல் என்பது எந்த நிறமும் அற்றதாக இருக்கக்கூடியது. பக்தர்களின் நிறம் என்னவோ, அதைப் பிரதிபலிக்கக்கூடியது. அப்படி, எல்லாவற்றையும் தனக்குள் இழுத்துக்கொண்டு, பக்தர்கள் என்ன வர்ணமோ, அந்த வர்ணத்தைப் பிரதிபலிப்பவளாக இருக்கக்கூடியவள் **ஸர்வ வர்ணோபஷோபிதா.**

பீத வர்ணம் (மஞ்சள்) என்று இல்லை; ரக்த வர்ணம் (சிவப்பு) என்று இல்லை; சுக்ல வர்ணம் (வெண்மை) என்றும் இல்லை! அனைத்தையும் தாண்டுகிறபோது ஸர்வவர்ணோப ஷோபிதா!

சாதாரணமாக வெண்மை என்கிற நிறம், அனைத்து வர்ணங்களையும் உள்ளடக்கியது என்று சொல்கிறோம். ஆனால், இங்கே, இன்னும் குறிப்பாக, அந்த வெள்ளையையும் தாண்டி, வர்ணமற்ற ஒரு தன்மையை - அனைத்து வர்ணங்களையும் ஏற்று பிரதிபலிக்கக்கூடிய தன்மையை அது குறிக்கிறது.

✱ ஸ்ரீ யாகினி தேவி



**சி**ந்தாமணி கிருஹத்தில் அம்பாள் இருக்கிறாள் என்று சொல்கிறோமே; அம்பிகையே சிந்தாமணிதான். 'தரித்ராணாம் சிந்தாமணி குண நிகா' என்று

(வளரும்)

படங்கள் : **வேதா**

# கொண்டாட்ட

டெண்டுல்கர் மீது நீண்ட நாட்களாக ஒரு கறை படிந்திருந்தது. 'இரண்டாவது இன்னிங்ஸில் அவருடைய ஆட்டம் எடுபடுவதில்லை. இக்கட்டான தருணங்களில் மேம்போக்காக விளையாடி அவுட் ஆகிவிடுகிறார்.' இது நூறு சதவிகிதம் உண்மை இல்லை என்றாலும் டெண்டுல்கரிடம் இருந்து ரசிகர்கள் எதிர்பார்ப்பது வேறு. உரிமையின் வெளிப்பாடாக அவரிடமிருந்து அசாத்தியமான செயல்களை வேண்டுகிறார்கள். அது தவறிப் போகிறபோது அவர் மீது கொண்டுள்ள உரிமையில் கோபப்படுகிறார்கள். கீழே பிடித்துத் தள்ளவும் செய்கிறார்கள். சச்சின் எல்லாவற்றையும்



கடந்துதான் வந்திருக்கிறார். சென்னை டெஸ்ட் மேட்சில் ஆடிய ஆட்டம், அவர் மீதான விமர்சனங்களுக்கு ஒரு பெரிய முற்றுப்புள்ளி வைத்திருக்கிறது.

சென்னை டெஸ்டுக்கு முன்பு நான்காவது இன்னிங்ஸில் இரண்டு செஞ்சுரிகள் மட்டுமே அடித்திருந்தார் டெண்டுல்கர். டெண்டுல்கரை விடவும் நான்காவது இன்னிங்ஸில் ராகுல் திராவிட்டின் பங்களிப்பு அதிகம். 99ல் சென்னையில் நடந்த பரபரப்பான டெஸ்ட் மேட்சில் டெண்டுல்கர் செஞ்சுரி அடித்தும் கூட, இந்திய அணியை வெற்றியின் விளிம்பு வரை கொண்டு சென்று தோற்றுப் போனார். இது ஒன்றே டெண்டுல்கர் மீது கல்லெறிய நிறைய சந்தர்ப்பம் கொடுத்தது. இதனால்தான் சென்னை டெஸ்ட் மேட்சில் இறுதி வரை அவுட் ஆகாமல் ஆடி, இனி யாரும் கைநீட்டிக் குற்றம் சுமத்தாதபடி ஒரு காரியம் செய்து காட்டிவிட்டார்.

சென்னையில் எப்போது டெஸ்ட் மேட்ச் நடந்தாலும் அது மயிர்க்கூச்செறிய வைக்கும் ஆட்டமாக அமைந்துவிடுகிறது. 20-20 என்கிற புதுக்குழந்தையின் வரவால் மூத்தவனான டெஸ்ட் மேட்சை எல்லோரும் புறக்கணிப்பதாகப் பேச்சு எழுந்த நிலையில், சென்னை டெஸ்ட் மேட்ச் அந்த பிம்பத்தை ஒரேயடியாக மாற்றியிருக்கிறது. கிரிக்கெட்டுக்கு ஆயிரம் புதிய குழந்தைகள் பிறந்தாலும், டெஸ்ட் மேட்ச் அளிக்கும் ஆனந்த அனுபவத்துக்கு வேறெதுவும் ஈடாகாது என்பது அழுத்தம் திருத்தமாக நிரூபிக்கப்பட்டுள்ளது.



இந்திய அணியும் நாளுக்கு நாள் ஏகாந்தமான அனுபவங்களை அளித்துவருகிறது. அணியில் எல்லா வீரர்களும் தங்கள் முழுப் பங்களிப்பைக் கொடுக்கிறார்கள். உலகத்தரமான வீரர்களும்

நாளுக்கு நாள் உருவாகி வருகிறார்கள். அசாத்தியமான திறமைக்கே அணியில் இடம் என்பது நிரூபணமாகியுள்ளது. அணியில் நிலவும் சந்தோஷமும் சிநேகிதமும் மைதானத்தில் பிரதிபலிக்கின்றன. இத்தனை நாள் காண்பிக்காத திறமைகளை சச்சினும் ஷேவாக்கும் மைதானத்தில் நிகழ்த்துவது ஓர் உதாரணம். ஜாகீர் கான், இஷாந்த் சர்மா என்று உலகத்தரமான வேகப்பந்து வீச்சாளர்கள் அணிக்கு அமைந்ததும் இப்போதுதான்.

2008, இந்திய அணிக்கு மகத்தான ஆண்டு. ஒரு சிறந்த தலைமையும், எந்தக் காரியத்தையும் நிகழ்த்திக் காட்டும் ஓர் அணியும் இப்போதுதான் வரமாகக் கிடைத்துள்ளன. ஆஸ்திரேலியாவைப் பின்னால் தள்ள ஓர் அணி உருவாகிக் கொண்டிருப்பது கிரிக்கெட்டுக்கு ஆரோக்கியமானது. ●

# வெளி!

க.நூ.கண்ணன்



**நந்தாவில் 'லொடுக்கு பாண்டி'யாக அறிமுகமாகி, 'திண்டுக்கல் சாரதி'யில் ஹீரோவாகி வலம்வரும் கதாநாயகன் கருணாஸ் கொஞ்சம் சீரியஸாகவே நம்மிடம் பேசினார்...**



# காமெடியால்

**கவுண்டமணி, வடிவேலு போன்றவர்களெல்லாம் ஒரு படத்தில் ஹீரோவாக வெற்றி பெற்று இரண்டாவது படத்தில் தோல்வி கண்டார்கள். நீங்களும் அடுத்த படத்தில் ஹீரோவாகத்தான் தொடர்வீர்களா?**

''நமக்குப் பொருத்தமான கேரக்டர்களைத் தேர்வுசெய்து நடிக்கும்போது, நிச்சயம் மக்கள் ஏற்றுக்கொள்வார்கள். எனக்காகக் கதை என்றில்லாமல், கதைக்குத் தேவைப்படும் ஹீரோ நான் என்ற சூழல் வரும்போது கண்டிப்பாகக் கதாநாயகனாக நடிப்பேன்.''

**காமெடி நடிகனுக்கும், கலைஞனுக்குமான வித்தியாசத்தை உணர்ந்துள்ளீர்களா?**

''அந்தக் காலத்தில் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், சந்திரபாபு போன்றவர்கள் நகைச்சுவையையும் தாண்டி மக்களுக்குக் கருத்து சொன்னார்கள். அவர்களையெல்லாம் மிகப் பெரிய கலைஞர்களாக மக்கள் பார்த்தார்கள். கல்வியறிவு, தகவல் தொடர்பு குறைவாக இருந்த காலகட்டம் அது. அன்றைய காலகட்டத்தில் சினிமாவில் கருத்துக்கள் சொல்ல ஆட்கள் தேவைப்பட்டனர். ஆனால் இன்றைய அபரிமிதமான கல்வியறிவும், தகவல் தொடர்பு வளர்ச்சியும், மக்களுக்குப் பல்வேறு விஷயங்களைத் தெரியவைக்கின்றன. எனவே சினிமாவில்தான் கருத்து சொல்ல வேண்டும் என்ற அவசியமில்லை. அதே சமயத்தில் இன்றைய நகைச்சுவை நடிகர்கள் நல்லவிதமான இல்வாழ்க்கை வாழ்ந்து, திரையிலும் ஆபாசமில்லாத நகைச்சுவையைத் தரும்போது, வாழ்வுக்கும் திரைக்கும் இடைவெளி இல்லாத போது, ரசிகர்கள் சிரிப்பு நடிகன் என்ற

நிலையையும் தாண்டி கலைஞனாகப் பார்ப்பார்கள்.''

**லொடுக்கு பாண்டி - திண்டுக்கல் சாரதி என்ன வித்தியாசம்?**

'' 'லொடுக்கு பாண்டி' பாலா சாரின் கண்டுபிடிப்பு. திண்டுக்கல் சாரதியிலும் லொடுக்கு பாண்டி ஐம்பது சதவிகிதம் இருப்பான். இந்த உலகத்தில் உள்ள அனைவருக்குமே தன்னைப் பற்றிய தாழ்வுமனப்பான்மை இருக்கும். உலக அழகி ஐஸ்வர்யாராய்க்கும் இருக்கும், அபிஷேக்பச்சனுக்கும் இருக்கும். தாழ்வுமனப்பான்மை அதிகமாகும் போது சைக்கோவாக மாறிவிடுகிறான். இந்தச் சூழலில் பெரியவர்களுடன் மனம் விட்டுப் பேசி, தீர்வுகாண வேண்டும். இதுபோல தாழ்வுமனப்பான்மையால் அவஸ்தைப்படும் கேரக்டர்தான் திண்டுக்கல் சாரதி. இந்தப் படத்தில் என் மனைவி க்ரேஸ் சில பாடல்களைப் பாடியுள்ளார். எனது குரலைப் போலவே குரல்வளம் கொண்ட கரகாட்டக் கலைஞர் 'அந்தோணி' என்பவரை, பாடகராக அறிமுகப்படுத்தியுள்ளோம்.''

**சார்லி சாப்ளின் தன் நகைச்சுவையை அரசாங்கத்தை எதிர்க்கும் ஆயுதமாக்கினார். நீங்கள்?**

''அப்படியொரு சூழலும், அதற்கான தேவையும், வாய்ப்பும் கிடைத்தால் கண்டிப்பாகச் செய்வேன்.''

**இராமேஸ்வரத்தில் நடந்த கண்டனப் போராட்டத்தில் இறையாண்மைக்கு எதிராகப் பேசியதாக சர்ச்சை கிளம்பியதே? இப்போது அதை வாபஸ் பெற்றுக் கொள்கிறீர்களா?**

''இலங்கைத் தமிழர்கள் நசுக்கப்படுவதற்கு எதிராக நான் பேசிய நியாயமான உணர்வுகளை ஏன் வாபஸ் பெறவேண்டும்? இறையாண்மையைப் பற்றிப் பேசுபவர்கள், கொஞ்சமும் இறையாண்மையே இல்லாமல் நடந்துகொள்ளும் இலங்கை அரசை ஏன் கண்டிக்க மறுக்கிறார்கள்? என் மொழி, இன மக்களுக்கு எதிராக நடக்கும் அட்டூழியத்தைத் தட்டிக் கேட்பது தவறு என்று சொல்வது ஜனநாயகத்துக்கே விரோதமானது. எட்டு கோடி தமிழ் மக்களின் உணர்வுதான் அந்தப் பேச்சு...''

கலகலப்பான கருணாஸ் கொஞ்சம் சூடாகி, அடுத்த 'ஷொட்'டுக்குக் குரல் வந்ததும் தணிந்து விடைபெற்றார் நம்மிடமிருந்து.

# ...வர்ன்மெண்டை எதிர்ப்பேன்!

## –கருணாஸ் பேட்டி

**- ராகவ்குமார்**

ஹாஸ்பிடல் எத்திக்ஸ் - 9

# மூச்சை நிறுத்த மூன்று கேள்விகள்!

''சட்டப்படி நம் நாட்டில் கருணைக் கொலை செய்யக்கூடாதுதான். ஆனால், அங்குமிங்குமாக அது நடக்கத்தான் செய்கிறது'' என்றார் நமக்கு அறிமுகமான ஒரு டாக்டர்.

''நானே ஒருமுறை அப்படிச் செய்திருக்கிறேன். முப்பது வயதுப் பெண்மணியை என்னிடம் அறிமுகப்படுத்திய அவளது அம்மா, 'தயவுசெய்து என் மகளைக் கொன்னுடுங்க டாக்டர். புண்ணியமாப் போகும்' என்றார். அவர் மகளுக்குப் பிறக்கும்போதே மூளை பாதிப்பு - டவுன் சின்ரோம் நோய். தவிர வலிப்பு நோய் வேறு அடிக்கடி ஏற்பட்டது. ஒரு கட்டத்தில் தசைகளும் செயல் இழக்க, படுத்த படுக்கை ஆகிவிட்டாள் அந்தப் பெண். முதுகில் பாளம்பாளமாகப் பள்ளங்கள். என்ன மருந்து கொடுத்தும் வலியைக் குறைக்க முடியவில்லை. எப்படியும் ஓரிரு மாதத்தில் அந்தப் பெண் இறந்துவிடுவாள். எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்துவிட்டு, ஒரு மருந்தை (நம்மில் பலரும் கேள்விப்பட்டிருக்கக் கூடிய ஒரு மருந்தின் பெயரைத்தான் டாக்டர் குறிப்பிட்டார்) 10 மில்லிலிட்டர் அவள் உடலில் ஏற்றினேன். உயிர் அமைதியாகப் பிரிந்தது.

கருணைக்கொலை பற்றி அடிக்கடி விவாதிக்கும் டாக்டர்களாகிய, எங்களில் பலரும் கருணைக்கொலை சட்டமாக வேண்டும் என்றே விரும்புகிறோம். காரணம், மனிதாபிமானம். தவிர முன்னேறிய நாடுகளில் இருப்பது போல, palliative care எனப்படும், வாழ்வின் கடைசி காலத்தை எண்ணிக்கொண்டிருப்பவர்களுக்கான சிறப்பு மருத்துவமனைகளும், அதற்கான சிறப்புக் கல்வியும் இல்லாத நிலையில், கருணைக்கொலைக்கான அவசியம் இங்கு அதிகம்தான்'' என்றார்.

சென்ற இதழில் குறிப்பிடப்பட்ட அனுராதாவுக்கு, மருத்துவசிகிச்சை அளித்த எலும்புநல மருத்துவரிடம் கருணைக் கொலை குறித்து கருத்து கேட்டோம். ''நெருங்கிய உறவில் திருமணம் செய்து கொள்ளாதீர்கள். அது இயற்கைக்கு முரணானது. பலவித உடல் நலச் சிக்கல்கள் வருவதற்கு எக்கச்சக்க வாய்ப்புகள் உள்ளன. தீர்க்கமுடியாத வியாதிகளுக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் ஒன்று, பெண்கள் முப்பது வயதைக் கடந்த பிறகு கருவுறுவது. ஆனால், பெரும்பாலான நோய்கள் பரம்பரையின் காரணமாக வருவனதான். அதனால்தான் உறவில் திருமணம் செய்து கொள்ள வேண்டாம் என்கிறோம்.

கொள்கை என்கிற அளவில் கருணைக் கொலையில் தவறில்லை. ஆனால், ஏழு மருத்துவர்கள் கொண்ட ஒரு குழு நோயாளியைச் சந்தித்து அவரிடம் அரை மணி நேரம் மனம்விட்டுப் பேச வேண்டும். விதிவிலக்காக ஒருவர்கூட இல்லாமல், ஏழு பேரும் அந்த நோயாளியின்

வேண்டுகோளை நியாயமானதாகக் கருதினால், 'அந்த வெகுமதியை அவருக்கு அளிக்கலாம்'. முக்கியமாக தீவிரமான புற்றுநோய், எய்ட்ஸ் போன்ற நோய்களின் இறுதி நிலையில் உள்ள நோயாளிகளுக்கு இந்த வாய்ப்பை வழங்குவதில் தப்பில்லை. தாங்கமுடியாத உடல் அவஸ்தையோடு, சிகிச்சை என்ற பெயரில் எக்கச்சக்கமான தொகையை மருத்துவமனைக்கும் மருத்துவர்களுக்கும் செலவழிப்பதைவிட, கருணைக் கொலையைப் பின்பற்றினால் நோயாளியின் குடும்பத்துக்காவது ஓரளவு பணம் மிஞ்சும். மேலும் இது குறித்து வெளிப்படையான விவாதங்களும், சட்ட மாற்றமும் தேவை என்றே தோன்றுகிறது'' என்றார்.



**க**ருணைக்கொலை அனுமதிக்கப்பட வேண்டுமா, வேண்டாமா? என்ற கேள்விக்குத் தீர்மானமாக விடை காண்பது மிகவும் கடினம். சமீபத்திய இரு உதாரணங்கள்:

செஸ் சாம்பியனாக விளங்கியவர் வெங்கடேஷ். நரம்பு மண்டலத்தில் தொற்றுக் கிருமிகள் பரவி, மஸ்குலர் டிஸ்ட்ரோஃபி நோயும் பாதிக்க, சுமார் ஒரு வருடத்துக்கு படுத்த படுக்கையாகிவிட்டார். இனி சிகிச்சையால் பலனிருக்காது என அனைத்து டாக்டர்களும் கைவிட்ட நிலையில், ''சில நாட்கள் நான் இப்படியே இருந்தால் என் உறுப்புகள் பாதிக்கப்படும். ஆரோக்கியமாக இருக்கும்போதே அவை பிறருக்கு அளிக்கப்பட வேண்டும்'' என்றார். ஆனால், மருத்துவர்கள் மறுத்துவிட்டனர். நீதிமன்றத்தை அணுகினர் பெற்றோர். 'உயிரோடு இருக்கும்போதே உறுப்புகளை தானம் அளிக்க முடியாது. இதற்கு டாக்டர்கள் உதவினால் அவர்கள் குற்றவாளியாகக் கருதப்படுவர்' என்று தீர்ப்பு வழங்கப்பட்டது!

இன்னொருவர் சீமா சூட். பிட்ஸ் பிலானியில் படித்து பொறியியல், மேலாண்மை ஆகிய இரு பிரிவுகளிலும் தங்கப்பதக்கம் பெற்றவர். இன்று ஓரளவு தேறிவிட்டார். வாக்கரை வைத்துக் கொண்டு நடக்க முடிகிறது. ஆனால், ஒரு காலகட்டத்தில் தம் அவல நோய்ப்பட்ட வாழ்க்கை பிடிக்காமல், தம்மைக் கருணைக் கொலை செய்ய வேண்டும் என்று மீண்டும் மீண்டும் டாக்டர்களிடம் கேட்டுக் கொண்டார். இது குறித்து ஜனாதிபதியிடமும் மனு போட்டார். ''இப்போது யோசித்துப் பார்த்தால், நான் அப்போது எடுத்த முடிவு தப்பானதாகத் தோன்றுகிறது'' என்கிறார்!

**ஜி.எஸ்.எஸ்.**

**ஆ**ஸ்திரேலியாவைச் சேர்ந்த ஒரு டாக்டர், கருணைக் கொலையின் தீவிர ஆதரவாளர். அவர் கையாளும் முறை:

நோயாளியின் சிரையில் (ரத்த நாளம்) ஒரு குழாய் செருகப்பட்டிருக்கும். எதிரில்

உள்ள கணினியை நோயாளி இயக்க வேண்டும். அடுத்தடுத்து மூன்று கேள்விகள் கணினித் திரையில் தோன்றும்.

1. இப்போது 'ஆமாம்' என்ற பொத்தானை அழுத்தினால் உங்களுக்கு விஷ மருந்து அளிக்கப்படும் என்பதை அறிவீர்களா?

2. அடுத்து தோன்றப்போகும் அறிவிப்பில் 'ஆமாம்' என்ற பொத்தானை அழுத்தினால் நீங்கள் இறந்துவிடுவீர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?

3. அடுத்த பதினைந்து நொடிகளில் உங்களுக்கு விஷ ஊசி மருந்து செலுத்தப்படும். சம்மதமா?

மூன்று கேள்விகளுக்கும் தங்கள் விரல் அசைவின் மூலம் ஆமாம் என்று பதிலளித்தால், நோயாளியின் உடலில் விஷம் ஏற்றப்பட்டு (இதற்கான ப்ரோக்ராம் தயார் நிலையில் இருக்கும்.) அவர் அமைதியாக இறப்பார்.

அதாவது டாக்டர் நேராக விஷ மருந்து ஏற்றவில்லையாம்! ''என்றாலும் தூக்குத் தண்டனையின்போது அதை நிறைவேற்றும் நபர் போலத்தான் உணர்ந்தேன்'' என்றார் அந்த டாக்டர்.

கருணைக்கொலை நெருடலாகவே இருப்பதற்குக் காரணம் இது தொடர்பாக எழக்கூடிய கேள்விகள்.

● தீவிர உடல்நோயால் அவதிப்பட்டாலும், மெல்ல மெல்ல அவரால் நார்மலான நிலைக்கு வரவே முடியாது என்பதை டாக்டர்களால் 100% உத்தரவாதமாகக் கூற முடியுமா?

● தீவிர மன பாதிப்பு ஏற்பட்டாலும் கருணைக்கொலை அனுமதிக்கப்படலாமா? அந்த நோயாளியால் சிந்தித்து முடிவு கூற முடியாத நிலையில் வேறொருவர் அந்த முடிவை எடுக்கலாமா?

● இன்று மிகத் தீவிரமாக சம்மதித்தாலும் நாளைக்கே அந்த எண்ணம் மாறலாம் இல்லையா?

● சம்பந்தப்பட்டவர் இறக்க விரும்பினாலும், அவரது நெருங்கிய உறவினர்கள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை என்றால் என்ன செய்வது?

● ஒருவர் இறந்தால் அதனால் உடனடி பொருளாதாரப் பலன் கிடைக்கும் என்ற நிலையில் வாரிசுகள் கருணைக் கொலையைத் தவறாகப் பயன்படுத்த முடியுமே.

● கருணைக் கொலை செய்யலாம் என்பதை, ஒரே டாக்டருக்குப் பதிலாக ஒரு மருத்துவக்குழு முடிவெடுப்பது புத்திசாலித்தனமா? அப்படியானால் அதில் எந்தத் துறையைச் சேர்ந்த மருத்துவர்கள் இடம் பெற வேண்டும்?

**(தொடரும்)**

''தலைவர் இவ்வளவு மட்டமா இருப்பார்னு நான் நினைக்கவே இல்லை.''

''ஏன்?''

''மனித சங்கிலிங்கறீங்களே, எத்தனை பவுன் தேறும்கிறார்!''

- ஆனந்த்



## மின்னல்கதைகள்

# நானும் வரட்டுமா?

அங்கயற்கண்ணி



**ரா**ஜேஷுக்கும் மனைவி விமலாவுக்கும் சிறு சிறு சச்சரவுகள் வரும். அதை அவள் பூதாகரப் படுத்தினாலும் ராஜேஷ் புஸ்வாணமாக்கி விடுவான். ஒருநாள் உரசல். மனவேறுபாட்டுடன் ராஜேஷ் அலுவலகம் சென்றான். சிறிது நேரத்தில் தொலைபேசி மணி அழைத்தது. எதிர்ப்பக்கம் விமலா. ''நீங்க மட்டும் சந்தோஷமா இருங்க. இன்று மாலைப்பத்திரிகையில் உங்கள் மனைவி மறைந்து விட்டாள்னு சேதி வரும்'' என்றாள்.

ராஜேஷ் பொறுமையாகக் கேட்டான். ''நீ செத்துப் போனால், சொர்க்கத்தில் இருக்கிறாயா, நரகத்தில் இருக்கிறாயா?ன்னு சொல். ஏன்னா நீ இல்லாம என்னால் தனியா இருக்க முடியாது. எனக்கும் அங்க ஒரு சீட் போடு'' என்றதும் விக்கித்து அழ ஆரம்பித்தாள். இந்த முறையும் சண்டை புஸ்வாணம் தான். ○

# மஃப்டியில் போலீஸ்

டிரைவிங் சீட்டிலிருந்தபடியே வினோத் ''என்ன ஸார்?'' என்றான்.

''நாங்க சி.ஐ.டி பிராஞ்ச் போலீஸ். மஃப்டில வந்திருக்கோம். உங்க காரை சோதனை போட வேண்டும்.'' நால்வரில் ஒருவன் பேசினான்.

''என்ன விஷயமாக?'' படபடப்புடன் வினோத் கேட்டான்.

''ஒரு மர்டர் விஷயமா; கதவைத் திறங்க...'' என்றான் இன்னொருவன்.

அவர்களை உற்றுப் பார்த்துகொண்டிருந்த உதய், ''வண்டியைக் கிளப்பு... அவங்க போலீஸ்காரங்க இல்லை'' என்று வினோத் காதில் அவசரமாகக் கிசுகிசுத்தான்.

''எதை வெச்சு அப்படி சொல்ற?'' என்று விழி அசைவில் கேட்டான் வினோத்.

''அதை அப்புறம் சொல்றேன். கிளப்பு...'' துரிதப் படுத்தவும் கிளப்பினான்.

ஐந்து நிமிடங்களில் பாதுகாப்பான இடம் தேடி நின்றது கார்.

''எப்படி அவங்க போலின்னு கண்டுபிடிச்சே..?'' என்று கேட்டான் வினோத்.

''அது... போலீஸ்காரங்க பெரும்பாலும் மஃப்டியிலே சட்டையை இன் பண்ணிருக்க மாட்டாங்க. யூனிஃபார்ம் எப்பவும் இன் பண்ணி வெறுத்துப் போய் மஃப்டியில ஃப்ரியா சட்டையைப் போட்டிருப்பாங்க. ஆனா, இவங்க நாலு பேரும் சட்டையை இன் பண்ணி டிப்டாப்பா இருந்தாங்க... மேலும் அவங்க பார்வை நம்ம சூட்கேஸ் மேலயே இருந்தது. அதான் சந்தேகம்'' என்றான்.

கோடி ரூபாய் அடங்கிய சூட்கேஸை பாதுகாப்பாகக் கையில் தூக்கியபடி, நண்பனிடம் பார்வையில் நன்றியை வழியவிட்டான் வினோத். ○






# அனைத்துக்கும்

நந்தன் நிலேகனி, நாராயண மூர்த்தியுடன் சேர்ந்து இன்ஃபோசிஸ் நிறுவனத்தை ஆரம்பித்தவர்களுள் ஒருவர். இன்று அந்த நிறுவனத்தின் இணைத் தலைவராக இருக்கிறார். டைம் பத்திரிகையின் 'உலகின் 100 மிக முக்கிய மனிதர்கள்' பட்டியலில் ஒருவராக இடம் பெற்றவர். இந்திய அரசால் 'பத்மபூஷண்' விருதளித்து கௌரவிக்கப்பட்டவர். அண்மையில் இவர் எழுதியுள்ள புத்தகம் 'Imagining India - ideas for the new century.' சமீபத்தில் சென்னை வந்திருந்த நந்தன் நிலேகனியின் பேட்டியிலிருந்து சில பகுதிகள்:

**இன்ஃபோசிஸ் நிறுவனத்தின் உலக ளாவிய சக்சஸ் சீக்ரெட் என்ன?**

''நமக்கு சில அடிப்படை நன்னெறிகள் உண்டு. அவற்றிலிருந்து எப்போதும், எந்தக் காரணத்துக்காகவும் நாம் விலகிவிடக் கூடாது. நாம் செய்வது பிசினஸ் என்றாலும், இந்தச் சமூகத்தில் நமக்குள்ள பொறுப்புகளைத் தட்டிக் கழிக்கக்கூடாது. முதலீட்டாளர்கள் நலனைக் காப்பது ஒரு கம்பெனியின் நோக்கமாக இருக்கலாம். அதேசமயம், கம்பெனியில் பணிபுரிகிறவர்களின் நலனைப் பாதுகாப்பதும் மிகவும் முக்கியம். இது போன்ற கொள்கைகள்தான் எங்கள் நிறுவனத்தின் வெற்றிக்கான அஸ்திவாரம்.''

● நந்தன் நிலேகனி

**இந்தியா பல்வேறு துறைகளிலும் முன்னேற்றம் கண்டிருந்தாலும், மக்களில் பலர் ஏழைகளாகவே இருக்கிறார்கள். ஏன்?**

''சுருக்கமாகச் சொன்னால், அரசியல்தான் காரணம். பெங்களூரில் இன்ஃபோசிஸ் அலுவலகத்தில் என்னைச் சந்தித்த ஒரு அயல்நாட்டுக்காரர், 'இன்ஃபோசிஸ் வளாகத்துக்குள்ளே இவ்வளவு அருமையான சாலை இருக்கும்போது, வளாகத்துக்கு வெளியில் அதுபோல இல்லையே! என்ன காரணம்?' என்று கேட்டார். அவருக்கும் நான் இதையேதான் காரணம் சொன்னேன். 'அப்படியென்றால், உங்களைப் போன்ற திறமைசாலிகள் அரசியலில் ஈடுபட வேண்டியதுதானே?' என்று கேட்டார். 'இது அமெரிக்கா இல்லை. அங்கே இன்றுவரை ஒரு பெரிய

நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பில் இருப்பவர். நாளையே நியூயார்க் நகர மேயராகிவிட முடியும். ஆனால், நான் இங்கே தேர்தலில் போட்டியிட்டால் டெபாசிட்கூட கிடைக்காது' என்று பதில் சொன்னேன்.''

**ஐ.டி.துறையால் புதிய வேலை வாய்ப்புகள் இனி சாத்தியமா?**

''இந்தியாவில் சுமார் ஐம்பது கோடி பேர் வேலை செய்யும் வயதில் இருப்பதாக வைத்துக்கொண்டால், ஐ.டி. துறையில் அதிகபட்சம் ஒரு கோடி பேருக்கு வேலை கிடைக்கும். அவ்வளவுதான்!''

**ஸாஃப்ட்வேர் துறையினருக்கு மிக இளைய வயதில், மிக அதிக சம்பளம். இது பலரை டிஸ்கோ, பியர் கலாசாரத்துக்கு இட்டுச் செல்கிறதே?**

''உண்மைதான். ஆயினும் எங்கள் நிறுவனத்தில் பணிபுரிகிறவர்களுக்கு பணத்தின் அருமையையும், உடல் நலத்தின் முக்கியத்துவத்தையும் உணர்த்தும் நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்கிறோம். அதற்கு நல்ல பலன் கிடைக்கிறது.''

**இந்தியாவின் மிகப் பெரிய சவாலான லஞ்ச ஊழலை ஒழிப்பது சாத்தியமா?**

# அரசியலே காரணம்!

''சட்டங்களை வெளிப்படையாகவும், எளிமையாகவும் ஆக்குவதன் மூலம் முற்றிலுமாக ஒழிக்க முடியாவிட்டாலும், கணிசமாகக் கட்டுப்படுத்தலாம்.''

**கிராமத்து மக்கள் வேலை தேடி நகர்ப்புறங்களுக்கு இடம்பெயர்வது அதிகமாகிக்கொண்டே போகிறதே?**

''நாடெங்கும் இருக்கும் சுமார் ஐந்நூறு சிறு நகரங்களை வளரச் செய்து வேலை வாய்ப்புக்கான சூழலை அதிகரித்தால், பெரிய பெரிய நகரங்களில் மட்டும் மக்கள் வந்து குவிவது மட்டுப்படும்.''

**கல்வியைப் பொறுத்தவரை, நகரம் - கிராமம்; அரசாங்கம் - தனியார் என்று தரத்தில் இடைவெளி அதிகமாக இருக்கிறதே?**

''நாடெங்கும் ஒரே மாதிரியான, தரமான கல்வியளிக்க நாம் தவறிவிட்டோம். இதற்கும் அரசியலையே காரணமாகச் சொல்லலாம்.''

சந்திப்பு, படம்: **எஸ். சந்திரமௌலி**

**ஹா**ர்டுவேர் ஐட்டங்களை இறக்குமதி செய்தபோது, 'பெற்றுக் கொள்ளும் இடத்தை' சென்னைக்குப் பதிலாக பெங்களூர் என்று மாற்றுவதற்கு அரசாங்க அனுமதி வாங்க, டெல்லியில் 18 நாட்கள் தங்கி, அரசு அதிகாரிகளுக்கு விளக்கமளிக்க வேண்டி இருந்தது.

**கு**ஜராத் மாநில அரசு மும்பை ஐ.ஐ.டி.யின் விரிவாக்க வளாகம் ஒன்றை குஜராத்தில் அமைப்பதற்கு நிலமும், நிதியும் அளிக்க முன் வந்தபோது, அப்போதைய மத்திய மனித வள மேம்பாட்டுத் துறை அமைச்சரான அர்ஜுன்சிங் அதற்கு அனுமதி தராமல் பல மாதங்கள் தள்ளிப் போட்டார்.

- 'Imagining India - ideas for the new century' புத்தகத்திலிருந்து சில பகுதிகள்

# சூரியன்





**கதை:**

சினிமாவில் நடிக்க ஆசைப்படும் ஒருவன் சந்தர்ப்பவசத்தால் தீவிரவாதியிடம் சிக்கிக்கொள்ள... பிறகென்ன தீவிரவாதியைப் பின்னிப் பெடலெடுக்கும் அதே கோடம்பாக்க குத்து பரோட்டாதான். இந்தமுறை ஜாக்குவார் தங்கம் ஸ்டண்ட் மாஸ்டரிலிருந்து இயக்குநர் அவதாரம் எடுத்து இருக்கிறார். ஹீரோ? அவர் மகன் விஜயசிரஞ்சீவி.

**ப்ளஸ்:**

★ ஆரம்பக் காட்சியிலேயே, 'இது ஆக்ஷன் படம் லாஜிக் குறித்து கேள்வி கேட்காதீர்கள்' எனச் சொல்லாமல் சொல்லியிருப்பது.

★ ஹீரோ விஜயசிரஞ்சீவியின், நிமிர்ந்து உட்கார வைக்கும் ஆக்ஷன் காட்சிகள்.

★ கீர்த்தி சாவ்லாவை, கிளாமருக்கு மட்டுமல்லாது நடிக்கவும் பயன்படுத்தியிருப்பது.

★ வடிவேலு, கணேஷின் காமெடி தர்பார்.

★ பாசத்தின் மகுடமாகத் திகழும் விஜயசிரஞ்சீவியின் குடும்பம்.

★ ஹீரோவுக்கு இணையாக உழைத்திருக்கும் ஸ்டண்ட் மாஸ்டர்.

**மைனஸ்:**

★ விஜயசிரஞ்சீவிக்கு நடிப்புச் சொல்லிக் கொடுங்க.

★ திரைக்கதையின் ஓட்டையில் ஒரு குடும்பமே நடத்தலாம்.

★ அசந்தால் ஆடியன்ஸுக்கும் அடி விழுந்து விடுமோ என எண்ண வைக்கும் சண்டைக் காட்சிகள்

★ நீபாவின் அநியாய கிளாமர்.

★ வரிசையாகப் போலீஸைக் கொலை செய்யும் தீவிரவாதி, தியாகி ரேஞ்சுக்கு வெளியே உலவுவது.

★ காதைக் கிழித்துவிட வேண்டும் என கங்கணம் கட்டிக்கொண்ட மியூஸிக்.

★ அங்கங்கே ஏகத்துக்கு எகிறும் எடிட்டிங்.

★ ஆக்ஷனை நம்பிக் களத்தில் குதித்திருக்கும் விஜயசிரஞ்சீவிக்கு சூரியன் 'அறிமுகம்' மட்டுமே!

– **கண்மணி**

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

? பொருளாதார நிதி நெருக்கடி, இங்கிலாந்தின் எலிசெபத் ராணியையும் பாதித்துள்ளது பற்றி?

! கவலைப்படும் அளவுக்குப் பாதிக்கவில்லை என்றாலும் தமது பேரன்களுக்குச் சிக்கனத்தையும் எளிமையையும் போதித்துள்ளார் என்பதும் கவனிக்கத்தக்கது. பிரிட்டனில் வழிகாட்டுபவர் இருந்தால், பின்பற்ற அரசும் மக்களும் முன் வருவார்கள். இங்கு? வழிகாட்டவே ஆளில்லையே!

## நீங்கள் கேட்டவை-தராசு

# மார்கழி பஜனையை ரசித்ததுண்டா?

● ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

? பெங்களூரில் மூடிக்கிடக்கும் திருவள்ளுவர் சிலையைத் திறக்க ப.சிதம்பரம் முயற்சி செய்ய வேண்டும் என்கிறாரே முதல்வர்?

! சிதம்பரம் இப்போது உள்துறை அமைச்சர் என்பதால் அந்தக் கோரிக்கையை வைத்துள்ளார் மு.க. பயங்கரவாதத்தை எதிர்த்து, வருமுன் காப்பது சிதம்பரத்தின் முதற்பணி. இதற்குப் பக்கபலமாக தேசிய ஒருமைப்பாட்டை வளர்ப்பது முக்கியமான இரண்டாவது பணி. இதைச் செய்தால், சிதம்பரத்தின் முயற்சி இன்றியே சிலை திறக்கப்பட்டுவிடும்.

● கே.என். சுப்பிரமணியன், சென்னை - 15

? ''பல நெருக்கடிகள் நிறைந்த நிலையில், திருமங்கலம் தேர்தலுக்கு அவசரம் ஏன்?'' என்று கேள்வி எழுப்பிய முதல்வர், தி.மு.க. உயர்மட்ட கொள்கை அமலாக்கக் குழுவை அவசரமாகக் கூட்டுவது ஏன்?

! திருமங்கலம் தி.மு.க.வுக்கு அமங்கலமாகி விடக் கூடாதே என்ற கவலை ஒரு புறம்; வைகோ தொகுதியை ஜெ.க்கு விட்டுக் கொடுத்துவிட்டாரே என்ற ஆதங்கம் ஒருபுறம். இரண்டுமாகச் சேர்ந்து அழகிரியைத் தேர்தலுக்குப் பொறுப்பாக்கும் தவறைச் செய்ய வைத்துள்ளது. தேர்தல் கமிஷனுக்குச் சவால் விட்டிருக்கிறார்; அ.தி.மு.க.வுக்கு அல்ல!



* ... அங்கீகாரம்



* வெற்றிக்கு...

● ராஜதுரை, சீர்காழி

? ''ஜெயலலிதா, சு.சுவாமி, சோ, கல்கி - பார்ப்பன ஊடகங்கள் இன அடிப்படையில் ஒன்றாகி நிற்கின்றன'' என்கிறாரே கி.வீரமணி?

! ஹிந்து பத்திரிகை பார்ப்பன ஊடகம் அல்ல என்று முடிவுக்கு வந்துவிட்டார் போலிருக்கு! சபாஷ்!

● D. ராதாகிருஷ்ணன், குளித்தலை

? அமெரிக்கா, பாகிஸ்தானுக்கு எச்சரிக்கை செய்து, 'தீவிரவாத நாடு' என அறிவிக்க முற்பட்டதை அடுத்து, சீனா, பாகிஸ்தானுக்கு ஆதரவுக் குரல் வெளிப்படுத்தி


* தேர்தல் கமிஷனுக்கும் சவால் !


* குழப்பும் கோணம்

யுள்ளதே?

! சீனா: என் எதிரியின் (இந்தியா) எதிரி எனக்கு நண்பன். அமெரிக்கா: என் எதிரியின் (பயங்கரவாதம்) நண்பன் எனக்கு எதிரி.

● அகிலா அன்புமணி, ஈரோடு

? ''தமிழக அரசு எல்லா இடங்களிலும் வெள்ள நிவாரணத்தை உடனுக்குடன், முறையாக வழங்கியுள்ளது. பொதுமக்களிடமிருந்து எந்தப் புகாரும் இல்லை'' என்று வெள்ளச் சேதத்தைப் பார்வையிட வந்த மத்தியக் குழு கூறியுள்ளதே?

! பார்வையிட வந்த மத்தியக் குழு எதைப் பார்க்க வேண்டுமோ அதை மட்டுமே பார்க்குமாறு மாநில அரசு கவனித்துக் கொள்ளும்.

● ஜெ. செல்வராணி, மதுரை

? ''தென் மாவட்டங்களில் இன்னமும் பல இடங்களில் இரட்டை டம்ளர் முறை உள்ளது. தலித் மக்களுக்கு வாழ்வாதாரம் கிடைக்க வழி செய்தால்தான் அதை ஒழிக்க முடியும்'' என பி.எஸ்.பி. செயலாளர் சிவகாமி கூறியுள்ளது பற்றி?

! உண்மை. அதனை அவரால் தமது புதிய அவதாரத்தில் அன்பினால் சாதிக்க முடிந்தால், வேறு பல புரட்சிகரமான மாற்றங்களும் தமிழகத்தில் நிகழும்.

● வே.நா.கதிர்வேல், வேலூர்

? ''எனக்கு இந்த பேன்ட் - சட்டை அணிந்து அலுத்துவிட்டது; கிராமத்தில் வாழும் விவசாயிகளின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் வகையில் இனி நிரந்தரமாக வேட்டி, சட்டை அணிய முடிவு செய்திருக்கிறேன்'' என்று கர்நாடக முன்னாள் முதல்வர் குமாரசாமி கூறியுள்ளாரே?

! நமக்கு இது போன்ற நாடகங்கள் அலுத்துவிட்டன. நாடகமாடும் அரசியல்வாதிகளை வெறுத்தும் விட்டோம்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? தீவிரவாதிகளின் தாக்குதலால் நிலை குலைந்துள்ள மும்பையில், இன்றும் சோதனைச் சாவடியில் உள்ள போலீஸுக்கு ஐம்பது ரூபாய் லஞ்சம் கொடுத்தால் வெடிகுண்டு லாரியே உள்ளே நுழையலாம் என்கிற அவல நிலையைப் படம் பிடித்துப் பதிவு செய்துள்ளாரே ஒரு பத்திரிகை நிருபர்?

! பயங்கரவாதத்தைக் காட்டிலும் அபா


* கவலையின் வெளிப்பாடு!

யகரமான அச்சுறுத்தல் இது தான். சிதம்பரத்தின் கவனத்துக்கு வந்தால் சரி.



* சாதிக்க முடிந்தால்...



* அறுபட்டும் நாடகம்

● **கே.ஜி.துரைசாமி, மங்கலப்பட்டி**

***? மார்கழி அதிகாலை எழுந்து பஜனை பாடும் குழுவினரை ரசிப்பீர்களா?***

! அடடா... அந்த அதிகாலைச் சிலுசிலுப்பில் எழுந்து, ஜால்ரா ஒலிக்க, பக்தி மேலிடப் பாடியபடியே சாலையில் செல்லும் அவர்களை, வீட்டில் இருந்தபடியே சூடாக காப்பி சாப்பிட்டபடி ரசித்ததுண்டு.

● **அ. அப்துல் காதர், சென்னை - 45**

***? ஷீலா தீக்ஷித்தின் திறமையான செயல்பாடு காரணமாகவே டெல்லியில் காங்கிரஸ் மூன்றாவது முறையாக வெற்றி பெற்றுள்ளது என அருண் ஜெட்லி மனம் திறந்து பாராட்டியுள்ளாரே?***

எதிராளியின் வெற்றியையும் திறமையையும் அங்கீகரிக்கும் அரசியல் பண்பு வாழ்க! வளர்க!

● **பா. அசோக், திருவில்லிப்புத்தூர்**

***? "ஈழப் பிரச்னையில் பாதிக்கு மேற்பட்டவர்கள் கிறிஸ்துவர்களாக இருந்திருப்பின், அமெரிக்கா போன்ற மேலை நாடுகள் உடனே தலையிட்டுப் பிரச்னையை என்றோ தீர்த்திருக்கும். ஹிந்துமதமாக இருப்பதால்தான் இன்னும் முடியவில்லை" என்கிறாரே ராமதாஸ்?***

! எப்படி? ஈராக்கிலும் ஆஃப்கானிஸ்தானிலும் செய்தது போலவா? ஈழத் தமிழர்கள் பூண்டோடு அழியவா? புதுப்புது தவறான கோணங்களில் பிரச்னையை அணுகினால் குழப்பம்தான் அதிகரிக்கும்; பிரச்னை தீராது.

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

***? ஒப்பிடுங்கள் - காதுல பூ; கை விரல் மை!***

! காதுல வைக்கும் பூவைக்கூட எடுத்து விசிறி எறிந்துவிடலாம். ஆனால், கை விரலில் வைக்கும் மை, வோட்டுப் போடும் மக்களின் முகங்களில் பூசப்படுகிற கரும் மையமாக மாறுவதுதான் கொடுமை!

● **ஜி. குப்புசுவாமி, சங்கராபுரம்**

***? இலங்கை உதவியுடன் தீவிரவாதிகள் கன்னியாகுமரியைத் தாக்கும் அபாயம் உண்டு என்று வைகோ கூறியுள்ளது பற்றி...?***

! அவருக்கு இப்போதுள்ள ஒரே கவலை, புலிகள் அடியோடு அழிந்துவிடக் கூடாதே என்பதுதான். அதற்காக எதை வேண்டுமானாலும் கற்பனை செய்து சொல்வார். கன்னியாகுமரியைத் தாக்கினால், இந்திய அரசின் கரங்கள் பூ பறித்துக் கொண்டிருக்குமா? ○

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்: **D. ராதாகிருஷ்ணன்,** குளித்தலை

★ ரூ.50/- பரிசு பெறுபவர்: **கே.என்.சுப்பிரமணியன்,** சென்னை - 15



# "ரொம்ப சந்தோஷம்... நாம பிரிஞ்சுடலாம்!"

அப்பா ஒன்றுமே சொல்லாதது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால், எனக்கு பிரமிப்பு நீங்கவில்லை. 'நான் எம்.ஜி.ஆரைப் பார்த்துவிட்டேன். அவர் எனக்கு முத்தம் கொடுத்தார்.' வீட்டுக்கு வந்ததும் எல்லோரிடமும் இதையே திரும்பத் திரும்பச் சொன்னேன்.

அது மட்டுமல்ல, இரண்டு நாட்களுக்கு நான் முகமே கழுவவில்லை. எங்கே அந்தத் தடம் போய்விடுமோ என்கிற அச்சம். இரண்டு நாட்கள் கழித்து அப்பாவின் காதுக்கு விஷயம் போனது. திட்டித் தீர்த்துவிட்டார். அதற்குப் பிறகுதான் முகம் கழுவினேன்.

பல வருடங்கள் கழித்து இந்த விஷயத்தை நான் எம்.ஜி.ஆர். அவர்களிடமே சொல்ல வேண்டிய வாய்ப்பு வந்தது. என்னைப் பார்த்து ரொம்ப சந்தோஷப்பட்டார். 'அய்யோ! ராதா அண்ணன் பொண்ணா? உனக்கு என்ன வேணும்னாலும் என்கிட்ட சொல்லு. என்னை வந்து பாரு' என்றார்.

அப்போது நான் நடிக்க வந்துவிட்டேன். திரையுலகில் நானும் ஒரு கதாநாயகி. அவரைப் பார்த்துவிட்ட ஆர்வத்தில், 'நானும் உங்களை அப்பாவோட வந்து பார்த்திருக்கேன். நீங்ககூட முத்தம் கொடுத்தீங்க' என்று சொல்ல நினைத்தேன். ஆனால், வார்த்தை வரவில்லை. சட்டென்று ஒரு கூச்சம் வந்துவிட்டது.

'இல்ல... நீங்ககூட... ரெண்டு நாளு... மூஞ்சி கழுவல' என்று எதையோ உளறிக் கொட்டினேன். நடுவில் இருந்த விஷயத்தை அப்படியே விழுங்கி விட்டேன். நான் சொன்னது அவருக்கும் புரியவில்லை. சுற்றியிருப்பவர்களுக்கும் புரியவில்லை. என்னை வினோதமாகப் பார்த்துவிட்டு எம்.ஜி.ஆர். நகர்ந்தார்!

பள்ளிக்கூடத்துக்குப் பெண் குழந்தைகளைக் காரில் போகச் சொல்லும் அப்பா, ஆண் பிள்ளைகளை நடந்து போகச் சொல்லுவார். கேட்டால், 'அவர்களுக்குக் கஷ்டம் தெரிய வேண்டும்' என்பார். எனக்கென்னவோ கார் பிடிக்கவில்லை. பஸ்ஸில் போகத்தான் பிடித்திருந்தது. ரொம்ப அடம்பிடித்து, கெஞ்சிக் கூத்தாடி, அப்பாவிடம் பஸ்ஸில் போக அனுமதி வாங்கினேன். ஆனால், அந்த உரிமைகூட ஆண் பிள்ளைகளுக்குக் கிடைக்கவில்லை.

ஒருநாள் என் தம்பி ராஜுவை அப்பா எதற்கோ அடித்துவிட்டார். ராஜு கொஞ்சம் கோபக்காரன். அன்று துணிந்து கேட்டுவிட்டான். 'ஏன் சும்மா, சும்மா எங்களை அடிக்கறீங்க?' அப்பா இதை எதிர்பார்க்கவில்லை. ஒரு கணம் அவனைப் பார்த்த

ராதிகா

வர், 'யேய்! போடா!' என்று சொன்னார்.

அவ்வளவுதான். அவனுக்குக் கோபம் அதிகமாகிவிட்டது. 'உங்க ரத்தக் கண்ணீர் நாடகம் நல்லாவே இல்லை' என்று ஒரு போடு போட்டான். அவனுக்கு அப்பா மேல் இருந்த கோபத்தை அப்படித்தான் காட்ட முடிந்தது. நாங்கள் எல்லாம் அப்பா என்ன செய்யப் போகிறாரோ என்று பயத்தோடு பார்த்துக்கொண்டிருந்தோம். அன்றைக்கு அப்பாவுக்குக் கோபம் வராதது எல்லோருக்குமே ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியம். அதோடு அப்படி ஒரு சிரிப்பு சிரித்தார். பிறகு எழுந்து போய்விட்டார்.

**ஒ**ருவகையில் என் தந்தை எனக்கு குரு. எனக்கே தெரியாமல் நான் அவரிடம் கற்றுக்கொண்டது ஏராளம். அவருடன் ஷூட்டிங் ஸ்பாட்டுகள், நாடகக் கொட்டகைகள் என்று நிறைய இடங்களுக்குப் போயிருக்கிறேன். அப்படி நான் ஒருமுறை போன இடம் ஊட்டி. அங்கே 'புதிய பறவை' ஷூட்டிங் நடந்துகொண்டிருந்தது.

இப்போதுகூட சமீபத்தில் சரோஜா தேவி கேட்டார்: 'நீ சின்ன வயசுல அங்க வந்தியே, ஞாபகம் இருக்கா?' என்று. அது மறக்க முடியாத அனுபவம். அப்போதெல்லாம் பெண் பிள்ளைகள் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று கட்டுப்பாடுகள் அதிகம். 'இதைச் செய்யாதே! அங்கே நிக்காதே!' என்று அதட்டிக் கொண்டே இருப்பார்கள்.

அங்கேதான் முதல் முறையாக நான் குதிரையில் ஏறினேன். குதிரையேற்றம் என்பது ஆண்களுக்கானது என்பது அப்போதைய கருத்து. எனக்குக் கூடப் பயமாகத்தான் இருந்தது. அப்பா தடாலடியாகச் சொன்னார்: 'ஆம்பளையாவது, பொம்பளையாவது. எதுலயும் பயம் இருக்கக்கூடாது. சும்மா தைரியமா ஓட்டு.'



இன்றைக்கு நிறைய பேர் கேட்கிறார்கள். 'நீங்க எப்படி இவ்வளவு நல்லா நடிக்கிறீங்க? டயலாக் எல்லாம் எப்படி இவ்வளவு மனப்பாடமா சொல்றீங்க?' என்று. அப்பாவுடன் பல ஷூட்டிங்குகளுக்குப் போன போது என்னை அறியாமல் இந்தத் திறன்கள் எனக்குள் பதிந்தன. நடிகையாக வரவேண்டும் என்ற திட்டம், எண்ணம் எதுவும் அப்போது இருந்ததில்லை!

என் தந்தைக்குப் படிக்கத் தெரியாதில்லையா? அதனால் வசனம் எழுதிய பேப்பர்களை வாங்க மாட்டார். ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வருவார். மேக்கப் போடும் போது யாராவது அன்றைக்கு அவர் நடிக்க வேண்டிய காட்சிகளை விவரித்து, வசனங்களைப் படித்துக் காட்டுவார்கள். 'ம்...ம்...' என்று கேட்டுக் கொள்வார். காட்சியில் நடிக்கும் போது ஒரு வார்த்தை கூட மாறாமல் பிரமாதமாகப் பேசி, கைத்தட்டல்களை அள்ளிக்கொண்டு போய்விடுவார்.



**“பிடிக்கலியா? வெளியே போ! நானா உன்னை நாடகம் பார்க்க வான்னு கூப்பிட்டேன்?”**

அந்தப் பழக்கம் எனக்கும் அப்படியே வந்துவிட்டது. நானும் என் தந்தையைப் போலவே வசன பேப்பர்களை வாங்கிப் படிக்கமாட்டேன். மேக்கப் போடும்போது கேட்டுக்கொள்வேன். எவ்வளவு நீளமான வசனமாக இருந்தாலும் அது அப்படியே எனக்குள் பதிந்து போய்விடும். காட்சியில் நடிக்கும்போது அந்த வசனங்கள் சரளமாக வந்து விழும்.

ஒருமுறை அப்பாவின் நாடகத்துக்கு நடுவில் ஒரு ஆள் எழுந்து கூச்சல் போட்டுக்கொண்டிருந்தார். 'என்ன... இப்படி எல்லாம் வசனம் பேசறீங்க? இது நல்லா இல்ல' என்று ஏதேதோ சொன்னார். அப்பா மேடைக்கு வந்தார். சத்தம் போட்டவரைப் பார்த்துக் குரல்கொடுத்தார்.

'பிடிக்கலையா? வெளில போ! நானா உன்னை நாடகம் பார்க்க வான்னு கூப்பிட்டேன்? நீதானே டிக்கெட் வாங்கிட்டு வந்தே? வெளில போ!' அவ்வளவுதான். அந்த நபர் மூச்சவிடாமல் வெளியே போய் விட்டார்!

'அண்ணாமலை' தொடர் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தபோது நான் தமிழ்ப்படங்களில் அதிகம் நடிக்கவில்லை. சில தெலுங்குப் படங்களில் மட்டும் நடித்தேன். இதற்கிடையில் எனக்கும் இயக்குநர் சி.ஜே. பாஸ்கருக்கும் நடுவில் நிறைய மிஸ்அண்டர்ஸ்டேண்டிங் வந்துவிட்டது. நாளுக்கு நாள் பிரச்னை அதிகமாகும் போலத் தெரிந்தது.

ஒருநாள் நானே அவரைக் கூப்பிட்டேன். 'இவ்வளவு நாள் என் சீரியல்ல ஒர்க் பண்ணினதுக்கு ரொம்ப சந்தோஷம். நாம பிரிஞ்சுடலாம்' என்றேன். இப்படி பட்டென்று பேசும் குணமும் எனக்கு அப்பாவிடமிருந்துதான் வந்திருக்க வேண்டும்.

(ரயில் வரும்)

எழுத்தாக்கம் : **பாலு சத்யா**

# ஆரோக்கியப் புன்னகை!

குழந்தைகளுக்கு வரும் பல் பிரச்னைகளைவிட, வயது வந்தவர்களுக்கான பிரச்னைகள் வித்தியாசமாக உள்ளன என்று ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன. பெரியோடான்டிஸ் மற்றும் ஈறுகளில் ரத்தம் வடிதல் போன்ற பல பிரச்னைகள் அவர்களுக்கு அதிகமாக இருப்பது தெரிய வந்தது. பெரும்பாலும் வயது வந்தவர்களில் தொண்ணூறு சதவிகிதம் பேருக்கு இந்தப் பிரச்னை இருப்பது தெரியவந்தது. இதனால் அவர்களுக்கு வாய் துர்நாற்றம், ஜிஞ்ஜிவிட்டிஸ் உள்ளிட்ட பிரச்னைகள் ஏற்பட்டு வருவதும் தெரிய வந்துள்ளது.

இருதய நோய், நீரிழிவு நோய், ஆஸ்டியோபோரோசிஸ் போன்ற பிரச்னைகள் இருந்தால் ஒருவரின் மோசமான வாய் மூலமே முதலில் வெளிப்படும்.

வயது வந்தவர்களுக்கு மட்டும் சிறப்பாக ஹிமாலயாவின் பற்பசை தயாரிக்கப்பட்டுள்ளது. ரத்தம் வடியும் ஈறுகள், வாய் துர்நாற்றம் போன்ற அவர்களின் பிரச்னைகளை இந்த ஹெர்பல் பற்பசை தீர்க்கும். இதன் மூலம் வலுவான பற்கள், ஆரோக்கியமான ஈறுகள் உண்டாகும். தொடர்ந்து ஹிமாலயாவின் பற்பசையைப் பயன்படுத்தும்போது ஈறுகள் வலுவாவதுடன், அவை ஆரோக்கியமாகவும் இருக்கும்.

ஹிமாலயாவின் பற்பசையில் ஃப்ளோரோஸ்பார் எனப்படும் எலுமிச்சை, ஃப்ளோரின் கலவை இணைந்துள்ளது. ஃப்ளோரைட்




டின் இயற்கைக் குணம் கொண்ட இது பற்சொத்தை விழுவதைத் தடுக்கிறது. பல் இனாமலை வலுவாக்குவதுடன், கிருமிகளை அழிக்கிறது. ஆசிட்டால் பல் பாழடைவதைப் பழுதுபார்க்கிறது. மேலும் ஹிமாலய மலைகளில் காணப்படும் தும்புரு அல்லது பல்வலி மரம் ஈறுகளில் ரத்தம் வடிவதைத் தடுக்கும். எலுமிச்சை குணம் கொண்ட இந்த மரத்திலிருந்து எடுக்கப்படும் பொருட்களை, வீடுகளில் முந்தைய காலத்தில் பல்வலி பிரச்னைக்குப் பயன்படுத்தி வந்துள்ளனர். ஹிமாலயாவின் பற்பசை, இந்த மருத்துவக் குணம் கொண்ட மரத்தின் பட்டைகளைக் கொண்டிருக்கிறது. மேலும் நீம், பபூல், மெஸ்வாகம், போமெகிரானெட் உள்ளிட்ட பல மருந்துப் பொருட்களும் இதில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதன் மூலம் நாள் முழுவதும் கிருமிகளை எதிர்த்து போரிட்டுக் கொண்டிருக்கும். பாக்டீரியா போன்றவற்றை நீம் எதிர்த்துக் கொல்லும். பபூல், மெஸ்வாக்... ஆகியவை ஈறுகளில் ரத்தம் வடிவதைத் தடுக்கிறது. மேலும் போமெகிரானெட் ஈறுகளை வலுப்படுத்தும்.



– மதி

### கர்நாடிக் எக்ஸ்பிரஸ்

டிசம்பர் 12-ம் தேதி தொடங்கி சென்னையின் வீதிகளை வலம்வந்து கொண்டிருக்கிறது இந்த 'கர்நாடிக் எக்ஸ்பிரஸ்'. Fortune நிறுவனமும் ரேடியோ மிர்ச்சியும் இணைந்து இயக்கும் இந்த 'மினி வேன்', இசை ரசிகர்களை இலவசமாக சபா விட்டு சபாவுக்கு அழைத்துக் கொண்டு செல்லும் சேவையை சந்தோஷமாகச் செய்து வருகிறது. சுமார் ஆறு வண்டிகள் இப்படி சபாக்களின் வளாகத்துக்கு 'டூர்' அடிக்கின்றன. ஒருவரே ஒருவர் பயணம் செய்தாலும் சரி, யாரையும் ஏற்றிக் கொள்ள மாட்டேன் என மறுப்பேதும் கூறாமல், ஜோராக சபா விட்டு சபா செல்லும் இந்த எக்ஸ்பிரஸுக்கு 'சபாஷ்' போடலாம்.

# கச்சேரிக்கு அப்பால்...

### சபா கேன்டீன்

இசை சபாக்களுக்கு இசைக் கச்சேரிகளை மட்டுமே ரசிக்கச் சென்ற காலம் மாறி, இப்பொழுதெல்லாம் சபாக்களிலிருக்கும் கேன்டீன் மெனுக்களையும் ரசிக்கும் காலமாகிவிட்டது. கடந்த பத்து ஆண்டுகளாக தி.நகரில் உள்ள ராமராவ் கலா மண்டபத்தில் இசை விழாக் காலங்களில் 'ஸ்ரீ ஜய ராகவேந்திரா கேட்டரர்ஸ்'லை வெற்றிகரமாக நடத்தி வரும் வித்யாசாகர், ''இங்கு அக்கம் பக்கத்தில் உள்ள அபார்ட்மென்டுகளைச் சேர்ந்த பலர் இசை விழாக் காலம் முடியும் வரை அதாவது ஒரு மாத காலம் இங்கு வந்து டிபன் சாப்பிட்டுவிட்டுச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இசைக் கச்சேரியைக் கேட்பதற்காகத்தான் சபாக்களுக்குச் செல்ல வேண்டும் என்ற காலம் மாறிவிட்டது. கேன்டீனுக்கு வந்து சாப்பிட்டுவிட்டு, இசைக் கச்சேரியைக் கேட்காமலேயே செல்பவர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது. அமாவாசை, ஏகாதசி மற்றும் சனிக்கிழமைகளில் நாங்கள் இங்கு சமைக்கும் உணவு வகைகளில் வெங்காயம் கலக்காமல் செய்வது, வாடிக்கையாளர்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது. உடுப்பி ஸ்பெஷல் ஐட்டங்களான, ஹிக்கி, அவல், பிஸி பேளா, மங்களூர் போண்டா, ஹயக்ரீவா ஆகியவை பலரது ஃபேவரிட் உணவு வகைகள்'' என்கிறார்.


* எஸ். நடராஜ

### மாறிவரும் இசை விழாக்கள்

1969-ல் தொடங்கி கடந்த 39 வருட காலமாக நுங்கம்பாக்கம் கல்சுரல் அகாடமியின் வெற்றிக்கு வித்திட்ட லய

எஸ். நடராஜனிடம், ''இசை விழாக்களில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் என எதைச் சொல்வீர்கள்?'' எனக் கேட்டதற்கு, ''1960 மற்றும் 70களில் இசைக் கச்சேரிகளைக் கேட்பது என்பதே ஏதோ வயதானவர்கள் மட்டுமே மேற்கொள்ளக்கூடிய ஒரு



# க்ரீன் ரூமுக்குச் சென்று இசைக் கலைஞர்களிடம் சந்தேகம் கேட்கிறது இன்றைய தலைமுறை!

பொழுதுபோக்காகவும், சம்பிரதாய மாகவும் கருதப்பட்டது. 1980களில் சற்றே நிலை மாறி இளைஞர்கள் பலரும் சங்கீதம் பயின்று கச்சேரிகள் செய்ய ஆரம்பித்தனர். 90களில் நல்ல பெரிய பெரிய படிப்பெல்லாம் படித்த இளைஞர்கள் சங்கீதத்தை ஒரு கேரியர் ஆகவே எடுத்துக்கொண்டு முழுமூச்சுடன் களத்தில் இறங்கினர். இப்பொழுதெல் லாம் வருடத்தில் குறைந்தபட்சம் இரண்டு முறையாவது அப்ராட் பயணம் என, வெளி நாடுகளிலும் இசைக் கலைஞர்களுக்கு அபாரமான வரவேற்பு கிடைக்கிறது. இசை ரசிகர்களாகவும் இளையதலைமுறையினரை மாடர்ன் ட்ரெஸ்களில் சபாக்களில் பார்க்க முடி கிறது. கச்சேரிக்கு முன் க்ரீன் ரூமுக்குச் சென்று சம்பந்தப்பட்ட இசைக் கலைஞர் களிடம் இசை சம்பந்தமான சந்தேகங் களைக் கேட்கவோ அல்லது கச்சேரி முடிந் ததும் தைரியமாகக் கேள்விகளை எழுப் பவோ இக்கால இளைய இசை ரசிகர்கள் தயங்குவதே இல்லை'' என்கிறார் நடராஜன்.



* சபாவுக்கு சவாரி


* சபா கேண்டீன்

செய்தி, சித்திரம்: **நளினி**

'பழனி என்றால் பஞ்சாமிர்தம்', 'திருநெல்வேலி என்றால் அல்வா' என்று கூறுவது போல, 'கல்கி என்றாலே இசை' என்பது தெரிந்த ஒன்றுதான். சங்கீத சீஸன் ஸ்பெஷல் வழக்கம் போல, இந்த வருடமும் ஸ்ருதி மாறாமல் பரிமளித்தது - பாராட்டுக்கள்.

**- ரேவதிப்ரியன், ஈரோடு-1**

நீங்கள் சொன்னது போல காதைக் கொடுத்தோம் - பல சுவையான விஷயங்களைக் கேட்(கமுடிந்தது)டோம்.

**- கே.ராஜகோபால், சென்னை-74**

'கிரேஸியைக் கேளுங்கள்' பகுதியில் கவிதை பற்றிய கேள்விக்குப் பதிலாக ஒரு வெண்பாவே எழுதிவிட்டாரே, சபாஷ் கிரேஸி!

**- கவிஞர் அய்யாறு வாசுதேவன், சென்னை-14**

ராகங்களைத் தம் குரலால் ரம்யமாக்கும் சௌம்யா 'கிளிக்'கிய படங்கள் அருமையா இருக்கும்மா!

**- எஸ்.வெங்கடரமணன், சென்னை-33**

கர்நாடக இசைப் பாடகர் எஸ்.ஆர். கிருஷ்ணமூர்த்தி 'தி கிரேட்'. சிறப்புச் சிறுகதை மனத்தை இறகுகளால் வருடியது. இந்த வாரம் இசை மழையில் நனைந்தோம். கல்கியா (அ) இசை சபாவா? வெகு ஜோர்!!

**- எஸ். மீனா, ஸ்ரீரங்கம்.**

எம்.ஆர். ராதாவுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்று அவரது மகள் ராதிகா கூறியதைப் படித்து, உண்மையிலேயே நாங்கள் ஆச்சரியப்பட்டுத்தான் போனோம். எம்.ஆர். ராதாவைப் 'படிக்காத மேதை' என்றுதான் சொல்ல வேண்டும்.

**- வே.ந.கதிர்வேல், வேலூர்-6.**

# கிரிக்கெட்டில்..

இசையமைப்பாளர் கடையநல்லூர் வேங்கடராமன் பற்றி 'கல்கி ராஜேந்திரன்' எழுதிய கட்டுரை, அந்தக் கலைஞரின் புகழை, ஆற்றலை அறிய வைத்தது. பாராட்டுக்கள்.

**- என்.எல்.மணிமாறன், கோட்டூர்.**

கிரிக்கெட் முன்னாள் - இந்நாள், வீரர்களது காதல் வரலாறு பற்றி அக்குவேறு ஆணிவேறாகப் பிட்டுப் பிட்டு விளக்கி சதம் அடித்துள்ளார், ச.ந.கண்ணன்!

**- ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி**



பயங்கரவாத எதிர்ப்பைக் கட்சி அரசியலுக்குப் பயன்படுத்தலாகாது என்பதை, தலையங்கத்தின் மூலம் பா.ஜ.க.வுக்கு எடுத்துக் கூறிய ஆலோசனை 'நச்

ான்று இருந்தது.

- என்.சங்கரதாஸ்,
ஸ்ரீவில்லிபுத்தூர்.





இசை ஒரு நோய் நிவாரணி. சர்க்கரை நோய், இதயநோய், ஒற்றைத் தலைவலி என எல்லாவற்றுக்கும் பலன் தருகிறது என டாக்டர் மைதிலி திருமலாச்சாரி சொன்னது ஆச்சர்யத்தை அளித்தது.

- எம்.ஜி.பரத், திண்டுக்கல்.

சென்னையில் மட்டுமே சொற்பமானவர்களால் ரசிக்கப்படும் கச்சேரிகளுக்கு 'சீஸன் ஸ்பெஷல்' தேவைதானா!

- அ. யாழினி பர்வதம், சென்னை-78.

# காதல் சதம் !

சீதா ரவியின் 'புதிய வானம்' மினி தொடர் வெகு நயம்! இத்தொடருக்கான ஜெயராஜின் வர்ண ஓவியங்கள் அருமை.

- போடி எஸ்.சையது முகமது,
சென்னை - 93

ஜே-3 காவல் நிலையத்தில் ராஜுவும், சீதாவும் நுழைகிற ஆரம்பக் காட்சியிலிருந்து கதை 'நிஷா' புயல் வேகத்தில் கிளம்பி மனநிறைவோடு முடிகிறது.

'புதிய வானம்' தொடர், ஆசிரியர் சீதா ரவியின் எழுத்தில் புதிய பரிணாமத்தைத் தொட்டிருப்பது உண்மையே.

- இதயா ஏசுராஜ்,
கல்லக்குடி.

21.12.08 தேதியிட்ட கல்கி இதழில் 'கருணைக் கொலை' பற்றிய கட்டுரை படித்தேன். அதில் இந்திய தண்டனைச் சட்டப் பிரிவு 309 (307 அல்ல) நீக்கப்பட்டு விட்டது என்று கண்டுள்ளது. அது தவறு. தற்கொலை முயற்சி தண்டனைக்கு உரியதுதான். மேலும் இந்திய அரசியல் சாசனத்துக்கு, பிரிவு 309 இ.த.ச. முரணானது அல்ல என்று உச்சநீதிமன்றம் தனது தீர்ப்பில் 1996ம் ஆண்டு தெளிவாகக் கூறியுள்ளது. வாழ்வதற்கான உரிமை சாவதற்கும் உண்டு என்பதை உச்ச நீதிமன்றம் ஏற்கவில்லை.

- எஸ்.விஜயராகவன், வழக்கறிஞர்,
திருச்சி.

இந்திய மனநல மருத்துவர் சங்கம், தற்கொலை முயற்சியை தண்டனைக்குரிய குற்றமாகக் கருதக்கூடாது எனத் தொடர்ந்து போராடி வருகிறது. தற்கொலை முயற்சி என்பது மனநலப் பாதிப்பின் ஓர் அம்சமே என்ற கருத்தில், கூடிய விரைவில், மற்ற நாடுகளைப் போல் நம் நாட்டிலும் இச் சட்டம் மாற்றப்பட வேண்டும் என்பதே எங்கள் விருப்பமும்.

-சிவ.நம்பி, (முன்னாள் தலைவர்,
இந்திய மனநல மருத்துவர் சங்கம்)

வட்ட மேஜை




# நான் நம்பும்

● **மாதங்கி, நாக்பூர்**

**கிரேசி, உங்களுக்கு 'ஜாதி'யில் நம்பிக்கை உண்டா...?**

நான் நம்பும் ஒரே ஜாதி எம் பொஞ்'சாதி'.

● **வி.ஸ்ரீதரன், நாட்டரசன்கோட்டை**

**நட்பின் இலக்கணம் என்ன...?**

வினைத் - தொகையை மாற்றும் பண்புத் - தொகை.

● **உமா மோகன்தாஸ், திண்டுக்கல்**

**மடிசார், மாடர்ன் டிரஸ். இதில் பெண்களுக்கு உகந்தது எது...?**

மடிசார் கட்டுவது தாலிக்காக; மாடர்ன் டிரஸ் ஜாலிக்காக... மடிசார் கட்டு; மாடர்ன் டிரஸ் இக்கட்டு.

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

**ஆலையில்லாத ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை... இலுப்பைப் பூ இல்லாத ஊருக்கு...?**

இன்ஸுலின் தேவையில்லாத இன் சொல்.

● **வி.ஜி. சத்தியநாராயணன், நங்கநல்லூர்**

**கடவுள் கொடுக்கும் தண்டனை எவ்வாறு இருக்கும்?**

செய்த குற்றத்தை நினைத்து நினைத்து வருந்தும் வரையில்... திருந்தும் வரையில் நீண்ட ஆயுள் தண்டனையாக இருக்கும்.

● **த. சத்தியநாராயணன், அயன்புரம்**

**கிருஷ்ண ஜெயந்தி, கிறிஸ்து ஜெயந்தி ஒப்பிடுங்கள்...?**

யதேச்சையாக ராதை ஏசுவைப் பார்த்தாள்.

'நீ கண்ணன்தானே' என்றாள்.

'ஆம்.. மரியன்னையே' என்றான்.

**பொஞ்சாதிக்கு சங்கம் வைச்சு பொழப்பப் பார்த்தா பொல்லாப்பு எப்படி வரும்?**

● **ஜே.துரைராஜ், ஆலப்பாக்கம்**

**உங்கள் நீண்ட நாள் ஆசை...?**

நீண்ட நாள்தான்...!

● **பூ.சீனுவாசன், வடபழனி**

**நெய்க்கு தொன்னை ஆதாரமா? தொன்னைக்கு நெய் ஆதாரமா...?**

தொன்னை அளவு நெய்யை ஆகாரமாக, அதுவும் செய்-கூலி இன்றிச் சாப்பிட்டால் ஆதார உடம்புக்குக்

சேதாரம்...!

● வெங்கட்ராமன், தர்மபுரி

**எப்படி அழைத்தால் கடவுள் வருவார்...?**

'கடவுள் உண்டு' பிரகலாதன் கூவ பதிலுக்குத் துரும்பும் அசையவில்லை. 'கடவுள் இல்லை' இரணியன் அறை கூவ, பதிலாகத் தூண் பிளந்தது.

● ரா.பிரசன்னா, மதுரை

**பொன் கண்டுபிடிப்பதற்கு முன்னால், பெண் எதனால் ஆபரணம் செய்து அணிந்தாள்?**

ஆரம்பத்தில் பொன் அகப்படாததால் ஆண்டவன் பூதனைப் படைத்தான். பிறகு பூவைப் படைத்து, பொன் வைக்கும் இடத்தில் பூவை வைத்தான். பூ, பூவை அதாவது பெண் ஆனது. பொன்னையும் பூவையும் எங்கு வைக்கலாம் என்று யோசித்து பொன்னை, பெண்ணின் கழுத்திலும், பூவை ஆணின் காதிலும் வைத்தான் அந்த அற்புதன்.

# (பொங்)சாதி!

● கிருத்திகா, மைசூர்

**எது மயக்கம்? எது போதை?**

ராதை கண்ணன் மேல் கொண்டது மயக்கம்; கண்ணன் ராதை மீது கொண்டது போதை.

● மா.உலகநாதன், திருநீலக்குடி

**'சட்டம் ஒரு கழுதை' என ஏன் கழுதையோடு ஒப்பிட்டுப் பேசுகிறார்கள்?**

சட்டம் கெட்டால் நாடு குட்டிச் சுவர். ○



**ஜெயா டி.வி.யில் ஒளிபரப்பாகும் 'கவரிமான்கள்' மெகா தொடர் பார்வையாளர்கள் மத்தியில் பரபரப்பான வரவேற்பைப் பெற்றுள்ளது. தொடரின் தயாரிப்பாளர் கம் இயக்குநர் பிரபு நேபாலிடம் நமது கேள்விகளும் அவரின் நறுக் சுருக் பதில்களும்...**

**கதை?**

மானைப் போல மெல்லிய மனது கொண்ட ஒருத்தியை, சூழ்ச்சிகளால் கவிழ்த்துப்போட குள்ள நரி போல புறப்படுகிறாள் இன்னொருத்தி. கவரிமான் வென்றதா... குள்ளநரி வென்றதான்னு திடுக் திருப்பங்களோடு கொண்டு வந்திருக்கோம். இது மானுக்கும் நரிக்கும் இடையே நடக்கும் திருவிளையாடல்.



* பிரபு நேபால்

**பெண்களை மோத விடுவது ஏன்?**

புராணக் காலம் தொட்டு, சாஃப்ட்வேர் காலம் வரை குடும்பத்தில் பெண்களின் பங்கு பெரிது. அவர்களை மோத விடும் போதுதான் கதைக்களம் சூடுபிடிக்கும். திரைக்கதை சுவாரஸ்யப்படும். எனினும் இதில் குடும்பத்துக்கான எத்திக்ஸும் உண்டு.

**கண்ணீர்தான் பிரதானமா...?**

மெகா தொடர்கள் என்றாலே கண்ணீர்தான் பிரதானம் என்பது போல ஆகிவிட்டது. இது தொடர்களுக்கு நேர்ந்துவிட்ட ஒரு சாபக்கேடு. அதனால்தான் என்னுடைய 'கவரிமான்கள்' தொடரின் நாயகி சித்தாராவின் கேரக்டரை, கூடுமான அளவு கண்ணீர் இல்லாமல் படைத்திருக்கிறேன். அதற்கான வரவேற்பும் நல்லாவே இருக்கு.

**தொடர்களுக்கும் காமெடிக்கும் ஒவ்வாமையா?**

யார் சொன்னது? என்னுடைய எதிர்காலத் திட்டமெல்லாம் காமெடியை மட்டுமே பிரதானமாகக் கொண்டு ஒரு மெகா தொடரை எடுக்கவேண்டும் என்பதுதான். வெளிநாட்டில் ஒளிபரப்பாகும் காமெடி தொடர்களைப் பார்க்கும் போதெல்லாம், இதுபோல தமிழகத்திலும் மாற்றம் வராதா என



ஏங்குவேன். என் ஏக்கம் விரைவில் நீங்கும்.

**ஈர்ப்பு குறைந்திருக்கறதா?**

உண்மைதான். ஒரே மாதிரி கதைதான் காரணம். தொடரின் தலைப்பை மட்டும் மறந்துவிட்டுப் பார்த்தால் எல்லாத் தொடர்களும் ஒரே மாதிரிதான் தோன்றும். நல்ல சிறுகதையைத் தொடராக்கலாம். நல்ல நாவல்கள் இருக்கின்றன; அவற்றைத் தொட

சேனல்



எடுக்கலாம்தான். ஆனால், அதற்கென ஆகும் பொருளாதாரச் செலவும், ஆட்களின் தேர்வும்தான் தயாரிப்பாளர்களை யோசிக்க வைக்கிறது. எனக்கான பொருளாதாரத் தேவையும், ஆள்பலமும் கூடி வரும்போது நல்ல வரலாற்று நாவல்களைத் தொடராக எடுப்பேன்.

**கேம் ஷோவா..? தொடரா...?**

மக்கள் மத்தியில் நிலைத்து நிற்க வேண்டுமெனில் தொடரே சிறந்தது; நல்லதும் கூட. மற்றபடி என் பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், எனக்குள் ஒரு மாற்றம் தேவைப்படும்போதும் கேம் ஷோக்களை நடத்துகிறேன். எனினும் என் வோட்டு தொடருக்குத்தான்.

# காமெடி தொடர் சாத்தியமா?

## –பிரபுநேபால் பேட்டி

ராக்கலாம். இலக்கியவாதிகளை கதை விவாதத்தின்போது பயன்படுத்திக் கொண்டால், இந்த மாதிரி விபத்து நேர்வதைத் தவிர்க்கலாம். கூடுமானவரை என் குழுவில் ஓர் எழுத்தாளர் இருப்பார்.

**வரலாற்றுத் தொடர் எடுக்கலாமே?**

**சினிமா...?**

சினிமா இயக்கும் எண்ணம் தற்போது இல்லை. வேண்டுமானால் தயாரிப்பாளர் ஆகலாம்.

**– கண்மணி**

மன்னார்குடியிலுள்ள 'செங்கமலத் தாயார் அறக்கட்டளை' ஆண்டுதோறும் சிறந்த தமிழ் எழுத்தாளர்களைத் தேர்ந்தெடுத்து, இலக்கிய விருதினை அளித்துக் கௌரவித்து வருகிறது. ரூ. 50,000 ரொக்கப் பரிசுடன் கூடிய இந்த இலக்கியப் பரிசினை இந்த ஆண்டு, வரலாற்று நாவலாசிரியர் கௌதம நீலாம்பரன் பெறுகிறார். சிறந்த பல படைப்புகளை எழுதி, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பங்காற்றிய வாழ்நாள் சாதனைக்கான இவ் விருதினை விக்கிரமன், கோவி. மணிசேகரன் போன்ற மூத்த எழுத்தாளர்கள் பலர் முந்தைய ஆண்டுகளில் பெற்றுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

* கௌதம நீலாம்பரன்



– கபிலன்

# கல்கி அடுத்த இதழ்...

## சினிமா ஸ்பெஷல்

- கதை
- கவிதை
- பேட்டி
- திரைப்பட விழா
- அனிமேஷன் கலாட்டா
- மாற்று சினிமா
- கட்டுரை
- காமெடி
- பாடல் பிரசவம்
- டப்பிங் படம்

ரெடி, டேக், ஆக்ஷன்!

**சினிமா கலைஞர்களின் பங்களிப்பில்...**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57"Registered No. TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.

WORLD GOLD COUNCIL



# பழமையையும் புதுமையையும் இணைப்பது எங்கள் விருப்பம்

## உதாரணமாக பாரம்பரியமான நம்பிக்கை மற்றும் சமகால வடிவமைப்புகள்

சில தொன்றுதொட்டு வரும் மதிப்புகள் மிக முக்கியமானவை என்று டாடாவின் கோல்டுபிளஸ்ஸில் நாங்கள் நம்புகிறோம். உதாரணமாக உபயோகிக்கும் தங்கத்தின் தூய்மை. ஆனால் அதே சமயம் தற்காலத்தின் சிறப்பான விஷயங்களையும் அரவணைத்துக் கொள்கிறோம் எனவேதான் தங்கத்தின் தூய்மையை அறிந்து கொள்ள நவீன தொழில் நுட்பத்தை உள்ளடக்கிய காரட் மீட்டர் உபயோகிக்கிறோம். அதனால்தான் எங்கள் வடிவமைப்புகளும் உண்மையாகச் சமகாலத்தைச் சார்ந்ததாக இருக்கிறது. சொல்லப் போனால் பழமை புதுமை இரண்டிலும் சிறந்ததைத்தான் நாமெல்லோரும் விரும்புகிறோம்.






Karatmeter

கோல்டுபிளஸ்
GOLDPLUS
from TATA
ஜுவல்லரி ஷோரூம்
உங்கள் வாக்குறுதிகள் நிறைவேறும்

தமிழகத்தில் அதிக கிளைகள் கொண்ட ஒரே ஜுவெல்லரி ஸ்தாபனம்

• ஈரோடு: 0424-2250298 • விழுப்புரம்: 04146-2 2686 • திண்டுக்கல்: 0451-2440077 • நாகர்கோவில்: 04652-230043
• தஞ்சாவூர்: 04362-2 885 • திருப்பூர்: 0421-6 5330 • கரூர்: 04324-645353 • திருநெல்வேலி: 0462-6456555
• வேலூர்: 0416-222926 கோட்டை: 043 -224567 • மார்த்தாண்டம்: 04651-271016 • சிவகாசி: 04562-233055
• கும்பகோணம்: 0435-2 • பட்டுக்கோட்டை: 04373-253924 • மயிலாடுதுறை: 04364-327666
• காரைக்குடி: 04565-2 9 • காஞ்சிபுரம் - 044-27230630